ஷாஃபி

# வஸீலாவும் உதவி தேடுதலும்

## الاستعانة والتوسل


தொகுப்பு :

மௌலவி ஹாபிழ்

எப். எம். இப்ராஹீம் ரப்பானி



வெளியீடு :

மஹ்பூப் சுப்ஹானி கமிட்டி

நூரிய்யா தெரு,

கூத்தாநல்லூர் - 614 101.

# நூல் விபரம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | வஸீலாவும் உதவி தேடுதலும் |
| மொழி | : | தமிழ் |
| தொகுப்பு | : | மௌலவி எப். எம். ரப்பானி |
| நூலின் உரிமை | : | ஆசிரியருக்கே |
| வெளியீடு | : | மஹ்பூப் சுப்ஹானி கமிட்டி<br>நூரிய்யா தெரு,<br>கூத்தாநல்லூர் - 614 101. |
| பதிப்பு ஆண்டு | : | முதற் பதிப்பு மே 2004 |
| நூலின் அளவு | : | 9.5 X 14.5 செ.மீ |
| எழுத்து | : | 11 புள்ளிகள் |
| பக்கங்கள் | : | 88 |
| தாள் | : | 13.6 வெள்ளை தாள் |
| மொத்த பதிப்பு | : | 1000 |
| அச்சிட்டோர் | : | ரப்பானியா பிரிண்டர்ஸ்<br>12/25, காந்தி தெரு, ஜீவா நகர்,<br>திருச்சி - 620 008.<br>போன் : 91-431-2701685 |
| விலை | : | ரூபாய் **20-00** |


## நூலின் கரு

நபிமார்கள் வலிமார்கள் போன்றோரை வஸீலாவாக்கி அவர்களிடம் உதவி தேடுவதன் மூலம் இம்மையையும் மறுமையையும் வெற்றிக்குரியதாக ஆக்கிக் கொள்ளல்

## முகவுரை

புகழனைத்தும் பிரபஞ்சத்தின் தோற்றவாளனுகிய அல்லாஹ் ஒருவனுக்கே. அவன்தான் இப்பிரபஞ்சத்தை படைத்து இதில் எண்ணற்ற ஜீவராசிகளை தோற்றுவித்தான். அந்த ஜீவராசிகளில் எல்லாம் மிகச்சிறந்த சிருஷ்டியாக மனித இனத்தை நிலை நிறுத்தினுன்.

அம்மனித இனத்திலிருந்து அவனை வழி நடத்துகின்ற தனது தூதர் பெருமக்களையும் வெளிப்படுத்தினுன். அத்தூதர் பெருமக் களில் தலையானவரும், எல்லா தூதர்களுக்கும் தலைவரும், ஸையிது மாகிய ஸர்வரே காயினுத், ஸையிதுல் முர்ஸலீன், ஷஃபீவுல் முத்னிபீன், தாஜ்தாரே தோ ஆலம், ஸர்காரே மதீனு, முஹம்மதுல் முஸ்தபா, ஹாமிதும் மஹ்மூதுமாகிய முஹம்மதுல் முஜ்தபா ஸல்லல் லாஹு அலைஹி வஸல்லம் அவர்கள் மீதும், அவர்களின் தாழில் அமர்ந்து அவர்களை மனம் வாக்கு காயம் ஆகியவைகளால் அங்கீக ரித்து அடிபணிந்து வாழ்ந்த அவர்களது தோழர் பெருமக்களின் மீதும், அவர்களின் எண்ணம், சிந்தனை, உதிரம் ஆகியவற்றை தமதாகக் கொண்ட அவர்களின் குடும்பத்தார் மீதும், அவர்களை தமதுயிருக்கும் மேலாக ஏற்று வாழ்ந்த, வாழ்ந்து கொண்டுள்ளோர் மீதும், இனி வாழப் போகின்றவர்கள் மீதும் வல்லோனின் வற்ரு பெருங் கருணையும் ஸலாத்தும் ஸலாமும் சதா காலமும் சுரந்துப் பொழிவதாக.

அடுத்து இறைவன் மனிதனுக்கு சிந்திக்கின்ற, யோசிக்கின்ற, பகுத்துப் பார்க்கின்ற அதியற்புதமான அறிவைத் தந்து, அத்துடன் அதை அலைகழிக்கும் ஆசையைத் தந்து மனிதன் மமதை கொள்ளா திருக்கவும் வழி வகுத்தான்.

அவன் அறிவுக்கும் ஆசைக்கும் மத்தியில் தடுமாறுகிற போதும், அவன் தன்னறிவை இழந்து நிற்கின்ற போதும் அவனை நெறிபடுத்

தவும், நேர்வழியில் நடத்தவும் தனதருளைக் கொண்டு பாதுகாக்கவும் தனது தூதர் பெருமக்களை அவனுக்குள்ளிருந்தே கொண்டு வந்தான்.

மனிதன் எத்தனைதான் கல்வி, கலை, ஞானங்களில் தேர்ந்தவனாக இருந்தாலும் கூட அவன் தனது இறைவனிடமிருந்து ஒன்றை பெற வேண்டுமாயின் அதனை நேரடியாக பெற்றுக் கொள்ளும் தகுதி என்பது படைப்புக்களில் எல்லாம் மிகவுயர்ந்த படைப்பாக இருக்கின்ற மனிதனால் கூட பெற்றுக்கொள்ள முடியாது என்பதே உண்மையாகும். அது வலியாக இருந்தாலும் சரி. நபியாக இருந்தாலும் சரி.

அதனால் தான் படைப்பாளனாகிய இறைவன் தனக்கும் தனது படைப்புக்களுக்கும் இடையே ஒரு இடைப் பொருளாக தனது ஹபீபாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கொண்டு வந்தான். இதில் ஆதம் அலைஹிஸ்ஸலாம் அவர்கள் கூட எல்லா வஸ்துக்களின் பெயர்களையும் கூட தமது ரஸூலாகிய முஹம்மத் நபியவர்களிடமிருந்து தான் கற்றுக் கொண்டனர்.

இதே நடைமுறை தான் மற்ற நபிமார்களுக்கும் வலிமார்களுக்கும் இவ்வுலகிலுள்ள ஒவ்வொரு துறையை சார்ந்த நிபுணர்களுக்கும் என்பதை நாம் திண்ணமாகச் சொல்லலாம். இதைத்தான் அண்ணலெங் கோமான் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்,...

ولو انا من غير الله وكل شيئ من غيره.

''நான் அல்லாஹ்வுக்கு அன்னியமாகி விடுவேனாயின் சிருஷ்டிப் பொருட்களனைத்தும் அவனுக்கு அன்னியமாகிப் போய்விடும்'' என்றும்,...

اول ما خلق الله نوري والخلائق كلهم من نوري.

''அல்லாஹ் முதன் முதல் எனது ஜோதியை படைத்தான். இன்னும் எனது ஜோதியிலிருந்தே படைப்புக்களனைத்தையும் படைத்தான்''

என்றும் கூறுவதை நாம் எண்ணிப் பார்க்க வேண்டும். அதேநேரம் தற்காலத்தில் இடைப்பொருளாகிய வஸீலாவை மறுப்போர் பெருகி வருவதையும் நாம் பார்க்கிறோம். இது இஸ்லாத்தின் ஆணி வேரையே

அசைக்கின்ற செயலாகுமாதலால் இதை குறித்த விளக்கமான அதேநேரம் சுருக்கமான ஓர் நூலை குர்ஆன் மற்றும் ஹதீஸின் ஆதாரங் களை கொண்டு உங்கள் முன் சமர்ப்பித்திருக்கிறேன். மேலும் இந்நூலை எனது உயிருக்குள் உறைந்துள்ள, என் உயிருக்கும் மேலான எனது ஷைகு நாயகம் சுல்தானுல் ஆரிபீன், ஸப்தத்துல் ஆபிதீன், குத்வத் துஸ் ஸாலிகீன், ஸையாஹே ஏஷியா, கதீபுல் ஹிந்த், அல்குத்பு, அல்லாமா அல்ஹாஜ் ஸையத் மஜ்ஹர் ரப்பானி மத்தழில்லஹுல் ஆலி அவர்களின் சன்னிதானத்திற்கு காணிக்கையாக ஆக்குகிறேன்.

அடுத்து கூத்தாநல்லூரை சேர்ந்த ''மஹ்பூப் சுப்ஹானி கமிட்டி'' யார் இந்த நூலை வெளியிடுவதற்கு முன்வந்ததை எண்ணி நாம் அல்லாஹ்வுக்கும் அவனது ஹபீபாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கும் நமது மெய் பொருள் ஆவியாகிய அனைத்தையும் நன்றிக்கு உரியதாக ஆக்குகிறோம். வல்லோனாகிய அல்லாஹ்வும் அவனது ரஸூலும் இக்கமிட்டியை சேர்ந்த அனைவ ருக்கும் வளமான வாழ்வையும் நிறைவான ஈமானையும் அருள் புரிந்து இவர்களை அருமை நபியவர்களின் ஷபாஅத்திற்கு உரியவர்களாக ஆக்கி வைப்பானாக. அத்துடன் இவர்களின் இம்முயற்சியையும் ஏற்று அங்கீகரிப்பானாக.

மேலும் இந்நூலை படித்துப் பயன்பெறும் அன்பர்கள் இவ்வெளி யேனின் ஈமானுக்காகவும் மறுமையின் சிறப்புக்காகவும் இவனது பெற்றோரின் மண்ணறை வாழ்வு அருமை நபியவர்களின் பேரொளி யால் பிரகாசம் பெற்று இலங்கவும் பிரார்த்திக்குமாறு பணிவுடன் வேண்டுகிறேன். அத்துடன் அல்லாஹ் மற்றும் அவனது ஹபீபாகிய முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் இந்நூலை ஏற்று அங்கீகரிப்பதோடு இதன்றி இன்னும் பல நல்ல நூல்களை இவ்வெளியேனை கொண்டு வெளிக்கொணர அருள் புரிவார்களாக. ஆமீன். பிஜாஹி ஸையிதில் முர்ஸலீன். ஸல்லல்லலாஹு தஆலா அலைஹி வஸல்லம்.

ஹிஜ்ரி - 1424 - ரபீவுல் அவ்வல்
கி.பி. - 2004 - மே

எளியோன்
**எப். எம். ரப்பானி**

# அணிந்துரை

எல்லாம்வல்ல அல்லாஹ்வின் பேரருளாலும் நமது உயிரினும் மேலான கண்மணி நாயகம் முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நல்லாசியாலும் நமது குருநாதர் ஷெய்குனா வ முர்ஷிதுனா வ முன்ஜீனா குத்புல் அக்தாப் கௌஸுல் அஃழம் முஹ்யித்தீன் அப்துல்காதிர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் துஆ பரக்கத்தாலும் எங்களின் மஹ்பூப் சுப்ஹானி கமிட்டி தனது முதல் சுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கை விளக்க வெளியீடான "வஸீலாவும் உதவி தேடுதலும்" என்னும் இந்நூலை வெளியிடுவதில் பெரு மகிழ்ச்சி அடைகிறது.

மேலும் இந்நூலின் ஆசிரியர் மௌலவி ஹாபிழ் எப். எம். இப்ராஹீம் ரப்பானி அவர்களுக்கும் அவர்களின் ரப்பானியா பிரிண்டர்ஸ் நிறுவனத்தாருக்கும் தனது மனமார்ந்த நன்றியினை தெரிவித்துக் கொள்கிறது.

இன்னும் இந்நூல் வெளிவருவதற்கு காரணமான இந்நூலாசிரியருக்கும் மற்றும் சரீர பலத்தைக் கொண்டு பேருதவி செய்த அனைவருக்கும் துஆசெய்ய வேண்டுமாய் மிகவும் பணிவுடன் வேண்டிக் கொள்கிறோம்.

யா அல்லாஹ்! உனது ஹபீபுடைய பொருட்டாலும் மஹான் முஹ்யித்தீன் ஆண்டகை அவர்களின் பொருட்டாலும் இச்சிறிய சேவையை ஏற்றுக் கொள்வாயாக. இதைக்கொண்டு எல்லோரும் பயன் பெறுவதற்கும், இதுபோன்ற பயன்மிக்க இன்னும் பல நூல்களை வெளியிடுவதற்கும் தௌபீக் செய்வாயாக. ஆமீன்.

என்றும் பணிவுடன்,

**மஹ்பூப் சுப்ஹானி கமிட்டி**

கூத்தாநல்லூர்.

# பொருளடக்கம்

الحمد لله رب العالمين والصلوة والسلام على سيدنا ونبينا ومولنا
محمد وآله واصحابه وذرياته واهل بيته اجمعين اما بعد
بسم الله الرحمن الرحيم

## இஸ்த்திஆனத்தும் தவஸ்ஸுலும்

ஒவ்வொரு மனிதனும் தனது இயற்கை நிலையில் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் இறை சிருஷ்டிகளின் உதவி ஒத்தாசையை தேடுபவனாகவே படைக்கப்பட்டுள்ளான். இந்நியதிக்கு மாறாக ஒருவன், நான் எந்தவொரு சிருஷ்டியின் உதவியுமின்றி சுயமாக வாழ முடியுமென்று சொல்வானாயின் அவன் ஒரு ஊருக்குள் இருப்பதை விட்டு விட்டு மலைகளும் குகைகளும் நிறைந்த ஒரு அடர்ந்த காட்டுப் பகுதியை தேடிச் சென்றுவிட வேண்டுமென்று அவனுக்கு நாம் ஆலோசனை வழங்குவோம். ஏனெனில் ஆடைக்கோ, குடியிருக்கும் வீட்டுக்கோ, வாகனத்திற்கோ அங்குதான் எந்தவொரு அவசியமுமிராது.

மேலும் ஒரு காரியத்தின் எதார்த்தவாதி என்பவன் ரட்சகனாகிய அல்லாஹ்வைத் தவிர வேறு யாருமில்லை. இந்நிலையில் படைப்புக்களில் நின்றும் ஏதாவதொன்று யாருக்காவது உதவி செய்யுமாயின் அது உண்மையில் அல்லாஹ்வுடைய உதவி தானென்பதில் எந்த சந்தேகமுமில்லை. பின்னும் படைப்புக்களின் உதவி என்பது இறைவனுடைய உதவியை வெளிப்படுத்தும் ஒரு காரணம் மட்டுமே. அவ்வாறின்றி யாராவது நான் இறைவனின்றி சுயமாக உதவி செய்வேனென்று சொல்வாராயின் இது அறவே சாத்தியமில்லை என்பதை நாம் விளங்கிக் கொள்வதோடு இப்படிப்பட்ட நம்பிக்கை தான் இஸ்லாமியக் கொள்கையில் ஷிர்க் என்னும் இணை வைத்தலாகும்.

## இமாம் அஹ்மத் ரஜாவும் இஸ்த்திம்தாதும்

இமாம் அஹ்மத் ரஜா பாழில் பரேலவி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றனர். உதவி தேடுதல் என்னும் இந்த இஸ்த்திஆனத்தை எடுத்துக் கொள்ளுங்கள். அல்லாஹ் அல்லாத அவனது சிருஷ்டிப் பொருட்களிடம் உதவி தேடுவதை ஷிர்க் கென்று கூறுகின்றனர். அதாவது உதவுவோனை ஒரு சுயார்த்த வாதியென நம்பி உதவி தேடுவதாம். இந்நிலையில் ஒரு நோயை நீக்க மருத்துவரிடம் சென்று உதவி தேடுவதும், அல்லது ஒரு மருந்தை உட்கொள்வதும், அல்லது வறுமையின் போது ஒரு செல்வந்தனிடமோ, ஒரு அரசனிடமோ சென்று உதவி தேடுவதும், இவ்வாறே நீதி கிடைக்க ஒரு நீதிபதியிடம் சென்று உதவி தேடுவதும், இதுபோன்றே அன்றாடம் சின்னச் சின்ன விஷயங்களில் உதவி தேடுவதுமாகிய இவைகளையெல்லாம் ஷிர்க்கென்று சொல்லிக் கொண்டிருக்கும் வஹாபிகள் கூட ஒவ்வொரு நாளும் தமது மனைவி மக்களிடமும் வேலைக்காரர்க ளிடமும் இதைசெய் அதைசெய். உணவை சமைத்து வை என்றெல்லாம் உதவி தேடத்தான் செய்கின்றனருகையால் இதுவும் ஷிர்க் தானென்பதில் அறவே ஐயமில்லை. மேலும் இவையனைத்தும் இறைவனுடைய எந்த உதவியுமின்றி சுயமாக செய்யப்படுகின்றதென நம்பப்படுமாயின் இதுதான் ஷிர்க்கும் குப்ருமாகும். அவ்வாறின்றி உதவி செய்பவரை இறைவனுடைய உதவி வெளிப்படும் துறையென்றோ அல்லது வஸீலா என்றோ அல்லது வாஸிதா என்றோ நம்பப் படுமாயின் இப்படிப்பட்ட உதவி நபிமார், வலிமார் போன்றோரிடம் தேடப்பட்டால் மட்டும் எப்படி ஷிர்க்காகும்? சுருங்கக் கூறின் எந்தவொரு படைப்பையாவது இறைவ னுடைய பேரருளின்றி, நல்லுதவியின்றி சுயமாக உதவ முடியுமென நம்பப்படுமாயின் அதுதான் ஷிர்க்கும் குப்ரு மாகும். அவ்வாறின்றி படைப்பானது அல்லாஹ்வை கொண்டு உதவி செய்வதில் அவனுடைய மழ்ஹர் என்றோ அல்லது வாஸிதா என்றோ அல்லது வஸீலா என்றோ அல்லது ரஹ்மத் என்றோ நம்பப்பட்டால் அதுதான் இஸ்லாமியக்

கொள்கையின் சரியான நிலையாகும்.

## இஸ்த்திஆனத்தும் தவஸ்ஸுலும் ஒன்றே

அல்லாஹ்தான் நாடப்பட்ட அஸல் பொருளாக இருப்பதால் அவனை வஸீலாவாக்க முடியாது. ஏனெனில் வஸீலாவானது அவனது சன்னிதானத்தில் அவனால் அங்கீகரிக்கப்பட்ட ஒரு பொருளாக இருக்க வேண்டும். அது ஸாலிஹான மனிதராக இருந்தாலும் சரி. அல்லது ஸாலிஹான அமலாக இருந்தாலும் சரி. அதைத்தான் வஸீலாவாக்க முடியும். அத்துடன் அந்த ஸாலிஹான மனிதரிடம் இஸ்த்திஆனத் (உதவி தேடுவ)தும் ஆகுமானதே. மேலும் வஸீலா என்பதும் இஸ்த்திஆனத் என்பதும் வெவ்வேறு பதமாக இருந்தாலும் இரண்டின் கருத்தும் ஒன்றுதான். இதுபற்றி அல்லாமா தகிய்யுத்தீன் சுப்கீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் தமது ஷிஃபாவுஸ் ஸகாம் என்னும் நூலில் 175வது பக்கத்தில் கூறுகின்றனர்.

واذ قد تحررت هذه الانواع والاحوال فى الطلب من النبي صلى الله عليه وسلم وظهر المعنى فلا عليك في تسميته توسلا او تشفعا او استغاثة او تجوها او توجها لان المعنى في جميع ذالك سواء.

“நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் ஏதாவதொரு பொருளை குறித்து கேட்கப்படுவதற்குரிய நிலையோ அல்லது அதன் வகை பற்றியோ சொல்லப்பட்டு அப்பொருள் என்ன நோக்கத்திற்காக கேட்கப்பட்டதென்பது தெளிவாக்கப்பட்டால் அவ்வாறு கேட்கப்பட்டதை தவஸ்ஸுல் என்றோ தஷப்புஃ என்றோ இஸ்திஃகாதா என்றோ தஜவ்வுஹ் என்றோ தவஜ்ஜுஹ் என்றோ எப்படி வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளுங்கள். ஏனெனில் இவ்வாக்கியங்கள் அனைத்துக்குமுரிய கருத்தும் ஒன்றுதான்”

## தொடர்பின் வகைகள்

உலமாக்கள் தொடர்புக்குரிய வகைகளை இரு வகையாக பிரிக்கின்றனர். ஒன்று ஹகீகத்துக்குரிய எதார்த்தமான அறிவு. மற்றொன்று மஜாஸிய்யத்தான எதார்த்தமற்ற அறிவு. இதில்

எதார்த்தமான அறிவுக்குரிய விளக்கமானது, ஒரு செயலுக்குரிய தொடர்பை ஒருபண்பின் பக்கமாக தொடர்பு படுத்துதல். உதாரணமாக "அன்பத்தல்லாஹுல் பக்ல - அல்லாஹ் பயிர்களை முளைக்க வைத்தான்" என்பதாகும். இதில் பயிர்களை முளைக்க வைத்தல் என்பது அல்லாஹ்வுடைய பண்பாகும். இச்செயலை அப்பண்புக்குரிய தாத்தின் பக்கமாக தொடர்பு படுத்தப்படுவதால் அதைத்தான் எதார்த்தமான அறிவென்று சொல்லப்படும்.

இனி எதார்த்தமற்ற மஜாஸிய்யத்தான அறிவுக்குரிய விளக்கமானது, ஒருசெயல் யாருடைய பண்பை சார்ந்ததாக இருக்கிறதோ அதை விட்டுவிட்டு அதனோடு தொடர்புடைய ஒருபொருளின் பக்கமாக திருப்பப்பட்டால், அதைகுறித்த ஏதாவதொரு அடையாளம் காணப்பட்டால், உதாரணமாக ஒருசெயலை காலத்துடனோ அல்லது ஒரு இடத்துடனோ அல்லது ஒரு காரணத்தின் பக்கமோ திருப்பப்பட்டால் அதாவது, அமீர் ஒரு நகரத்தை உருவாக்கினான் என்று சொல்லப்படுவதை போல. இதில் அமீர் என்பவன் ஒரு காரணம் மட்டுமே. அவனது கட்டளையின் பேரில் அந்நகரம் உருவாக்கப்பட்டது அவ்வளவு தான். இவ்வாறு கட்டிடம் உருவாக்கப்படுவதற்குரிய தொடர்பை மஜாஸியாக அமீர் என்பானுடன் இணைத்துப் பேசப்பட்டதால் இதனை மஜாஸி என்று சொல்லப்படும்.

இன்னும் மஜாஸிய்யத்தை ஆதாரப்படுத்துபவன் சில போது அதை சொல்லை கொண்டும் சிலபோது சைக்கினையைக் கொண்டும் பேசுவான். இதில் சைக்கினையை கொண்டு சொல்வதற்குரிய உதாரணத்தை அல்லாமா தஃப்தாஸானி அவர்கள் தமது அஹ்வாலுல் அஸ்னத் என்னும் நூலில் இவ்வாறு கூறுகின்றனர்,...

وانبت الربيع البقل فمثل هذا الكلام اذا صدر عن الموحد يحكم بان اسناده مجاز لان الموحد لا يعتقد انه الى ما هو له.

“ஒரு ஏகத்துவவாதியிடமிருந்து பருவம் பயிரை முளைக்க வைத்ததென்னும் சொல் வெளிப்படுமாயின் அதை மஜாஸி யென்று சொல்லப்படும். ஏனெனில் ஏகத்துவவாதியின் நம்பிக்கையானது பயிரை முளைக்க வைத்தல் என்பது எதார்த்தத்தில் பருவத்துடைய பண்பல்ல என்பதாகும். ஆனால் இதே வார்த்தையை அல்லாஹ்வை ஏற்காத ஒருவன் சொல்வா னாயின் அதை ஹகீகத்தென்று சொல்லப்படும்” மேலும் அல்லாமா தஃப்தாஸானி ரஹிமஹுமுல்லாஹ் கூறுகின்றனர்,...

فهذا الاسناد وان كان الى غير ما هو له لكن لا تأول فيه لانه مراده ومعتقده وكذا شفى الطبيب المريض.

“இதில் காபிருடைய சொல்லானது அச்செயல் எதார்த்தத்தில் யாருடைய பண்பைச் சார்ந்ததோ அவரை நோக்கி சொல்லப் பட்டதல்ல. மாறாக அதற்கு அன்னியமான பொருளை நோக்கி சொல்லப்பட்டதாகுமாதலால் அதை மஜாஸியென்று சொல்ல முடியாது. காரணம் அதை அவன் எதார்த்தமென்று கருதுகிறான். அதாவது மருத்துவர் நோயாளியை சுகப்படுத்தினார் என்று சொல்வதை போல”

இதுகுறித்த விரிவான விளக்கமானது, மருத்துவர் நோயாளியை சுகப்படுத்தினார் என்னும் காபிருடைய சொல்லானது எதார்த்தத்தை கருதி சொல்லப்பட்டதாகும். ஏனெனில் அவன் அல்லாஹ்வுடைய செயலின் தாக்கத்தை ஒப்புக் கொண்டவனல்ல. இனி இதே வார்த்தையை ஒரு இறை நம்பிக்கையாளன் சொல்வானாயின் அதை மஜாஸி யென்று சொல்லப்படும். ஏனெனில் அவன் இறைவனை விசுவாசித்தவன் என்பதுதான் அதற்குரிய காரணமாகும். இந்நிலையில் அவன் ஒரு நோயாளியின் சுகத்தை ஒரு மருத்து வரோடு இணைத்து சொல்வதற்குரிய காரணமானது, மருத்துவர் அந்நோயாளியின் சுகத்துக்கு ஒரு காரணமாக மட்டுமே இருக்கிறாராதலால் அக்காரணத்தை தான் அந்த இறை நம்பிக் கையாளன் சுட்டிக் காட்டுகிறான். மற்றபடி எதார்த்தத்தில்

சுகத்தை தருபவன் அல்லாஹ் என்பதே அவனுடைய அகீதாவாகும்.

ஆக இதுவரை நாம் சொல்லிக்காட்டிய விளக்கத்தை கொண்டு இஸ்த்திஆனத் என்பது என்னவென்பதை தெளிவாக விளங்கியிருப்பீர்களென்று நினைக்கிறோம். ஏனெனில் நபிமார்களிடமும் வலிமார்களிடமும் உதவி தேடுபவர் ஒரு முஃமினாக இருந்தால் அவன் முஃமின்தான் என்பதற்கு அவனுடைய பார்வையில், கேட்கப்படும் உதவியை நிறைவேற்றி தருபவன் உண்மையில் அல்லாஹ் தான் என்பது அவனுடைய நம்பிக்கையாகும். இந்நிலையில் அவன் நபிமார்களையும் வலிமார்களையும் தனது உதவிக்குரிய ஒரு காரணமாகவும் வஸீலாவாகவும் தான் நினைக்கிறான்.

அடுத்து ஸிராஜுல் ஹிந்த் அல்லாமா அப்துல் அஸீஸ் முஹத்திஸ் தெஹ்லவி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இய்யாக நஸ்த்தஈன் என்னும் வசனத்திற்குரிய விரிவுரையில்.,,,

"இந்த இடத்தில் ஒன்றை புரிந்துகொள்ள வேண்டும். அதாவது, இறைவனல்லாத அவனது படைப்புக்களிடம் உதவி தேடுவோர் அவர்களை ஒரு வஸீலாவாகவோ அல்லது இறை வெளிப்பாட்டின் ஒரு துறையாகவோ கருதாமல் உதவி தேடுவாராயின் அது ஹறாமாகும். அவ்வாறின்றி உதவி தேடப்பட்டவரை இறைவனுடைய வஸீலா என்றோ அவனது வெளிப்பாட்டுக்குரிய மழ்ஹறென்றோ எண்ணியவராக எதார்த்தத்தில் உதவுபவன் அல்லாஹ் தானென்று நம்பி உதவி தேடுவானாயின் இது ஷரீஅத்தில் அனுமதிக்கப்பட்டதும் இறைவனை அறிந்து கொள்வதற்குமுரிய பாதையுமாகும். இவ்வாறான உதவியை நபிமார்களும் வலிமார்களும் இறைவனல்லாத படைப்புக்களிடம் தேடியுள்ளனர்"

அடுத்து அஹ்லெ ஹதீஸின் மிகப்பெரும் அறிஞரான நவாப் வஹீதுஸ்ஸமான் என்பார் எழுதுகிறார்.,,,

وضابطه ان الامور التی کانت تطلب من الانبیآء والصلحاء حال کونهم احیاء

مثل الدعاء او الاستشفاع فطلبها منهم بعد موتهم لا يكون شركا اكبر والامور التى هي مختصر بالله وكانت لا تطلب منهم وهم احياء فطلبها منهم بعد ان ماتوا يكون شركا كما كان طلبها عنهم وهم احياء شركا الا ان يكون الاسناد مجازيا كما في قول عيسى واحى الموتى باذن الله تعالى صرح بذالك شيخ الاسلام في بعض فتاواه

"எந்தெந்த காரியங்களை குறித்து நபிமார்களிடமும் ஸாலிஹீன்களிடமும் அவர்களது ஜீவிய காலத்தில் கேட்கப் பட்டதோ உதாரணமாக பிரார்த்தனை ஷபாஅத் போன்ற வைகளை குறிப்பிடலாம். அவைகளை அவர்களது மறைவுக்கு பின்னரும் கேட்பது ஷிர்க்காகாது. இனி எந்தெந்த காரியங்கள் இறைவனுக்கு மட்டும் சொந்தமானவைகளாக இருக்கின் றதோ, எவைகள் நபிமார் மற்றும் வலிமார்களின் ஜீவிய காலத்தில் அவர்களிடம் கேட்கப்பட வில்லையோ அவைகளை அவர்களது மறைவுக்குப் பின் கேட்பதுதான் ஷிர்க்காகும். ஆம். எவையெவை அவர்களுடைய ஜீவிய காலத்தில் அவர்க ளிடம் கேட்பது ஷிர்க்காக இருந்ததோ அவைகளாகும். மற்றபடி மஜாஸியான காரியங்களை அவர்களோடு சம்பந்தப் படுத்தலாம். எவ்வாறெனில் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாம வர்கள், நான் அல்லாஹ்வுடைய கட்டளையை கொண்டு இறந்தவர்களை உயிர்ப்பிக்கிறேன் என்று சொன்னதைப் போன்றதாகும். இதுபற்றி ஷைகுல் இஸ்லாம் (இப்னு தைமிய்யா) தனது பல்வேறு பத்வாக்களில் விரிவாகக் குறிப்பிட்டிருக்கிறார்"

நூல்: ஹறத்யத்துல் மஹ்தி, பக்கம்-18,19.

மேலும் மஜாஸியான தொடர்பை பற்றி நவாப் வஹீதுஸ் ஸமான் விபரிக்கும் போது.,,,

وكما فى قوله تعالى واذ تخلق من الطين وتبرئ الاكمه والابرص باذنى فاسند الخلق والابرأ الى عيسى مجازا فلو طلب احد من عيسى روح الله ان يحيى ميتا باذن الله فلا يكون شركا اكبر وكذالك لو طلب احد

من ولي حي او من روح نبي او صالح ان يهب له الاولاد او يشفيه من مرض او يدفع عنه سوء باذن الله وامره فهذا لا يكون شركا اكبر.

"அல்லாஹ் தனது வேதத்தில் "வஇத் தக்லுகு மினத்தீனி" என்னும் வசனத்தில் படைப்பதையும் சுகமளிப்பதையும் ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்களோடு மஜாஸியாக இணைத்துப் பேசுகிறான். இதைகொண்டு யாராவது ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்களிடம் அல்லாஹ்வுடைய கட்டளையை கொண்டு அவர்கள் இறந்து போனவரை உயிர்ப்பித்துத் தர வேண்டுமென்று கேட்பாராயின் இது ஷிர்க்காகாது. இது போன்றே யாராவது ஒருவர், உயிரோடுள்ள ஒரு வலியிடமோ அல்லது நபியிடமோ அல்லது அவர்களின் ஆன்மாக்களிடமோ அல்லாஹ்வின் கட்டளையை கொண்டு தனக்கொரு பிள்ளையை தர வேண்டுமென்றோ அல்லது தனது நோயை தீர்க்க வேண்டுமென்றோ கேட்பாராயின் இதுவும் ஷிர்க்காகாது" நூல்: ஹாஷியா ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-19.

## தீர்ப்பு

மேற்கண்ட விளக்கத்தை கொண்டு நபிமார்களிடமும் வலிமார்களிடமும் நமது நாட்டங்களையும் தேவைகளையும் கேட்பது குப்ரோ அல்லது ஷிர்க்கோ ஆகாது என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். ஆனால் இன்று நம்மிடையே உள்ள வஹாபிகள் இதிலுள்ள நுணுக்கத்தை விளங்காது எடுத்ததெற்கெல்லாம் குப்ரு என்றும் ஷிர்க் என்றும் பத்வா கொடுத்து வருவது மிகவும் வேதனைக்குரிய விஷயமாகும்.

மேலும் எதார்த்தத்தில் ஒருவரது நாட்டத்தை நிறைவேற்றுபவன், ஒருவரின் துன்பத்தை போக்குபவன் அல்லாஹ் தான் என்பது வெள்ளிடைமலை. இந்நிலையில் அவனிடம் நபிமார் மற்றும் வலிமார்களின் வஸீலாவை கொண்டு நமது தேவைகளையும் நாட்டங்களையும் கேட்பதுதான் அழகானதும் விரும்பத்தக்கதுமாகும். இன்னும் நபிமார்களிடமும் வலிமார்களிடமும் கேட்பது உண்மையில் அல்லாஹ்விடம் தான் கேட்டதாகு

மாதலால் இதை புரிந்து கொண்டால் இஸ்லாமியருக்கிடையே உள்ள பூசல்கள் வெகுவாகக் குறைந்து விடும்.

## இஸ்த்திஆனத்தும் குர்ஆனும்

இறை வேதமாகிய குர்ஆனையும் ஹதீஸையும் நமது சிந்தனைக்கு நாம் உட்படுத்தும் போது நபிமார்களும் அவர்களின் தோழர் பெருமக்களும் அவசியத்தின் போது இறைவனுடைய படைப்புக்களிடம் உதவி தேடியுள்ளனர். அதுபற்றிய சில வசனங்களை இப்போது நாம் பார்ப்போம்.

يايها الذين آمنوا كونوا انصار الله كما قال عيسى ابن مريم للحواريين من انصاري الى الله قال الحواريون نحن انصار الله.

**"ஓ! விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வின் (மார்க்கத்திற்கு) உதவியாளர்கள். மர்யமுடைய மைந்தர் ஈஸா ஹவாரிய்யூன்களை நோக்கி, அல்லாஹ்வுடைய தரப்பிலிருந்து எனக்கு உதவி செய்பவர் யார் என்று கேட்டபோது, அதற்கு ஹவாரிய்யூன்கள் நாங்கள் அல்லாஹ்வின் (மார்க்கத்திற்கு) உதவியாளர்கள் என்று கூறினர்"** (சூரா - ஸஃப், வசனம்-14.)

இந்த வசனத்தில் அல்லாஹ், முஃமின்களிடம் தனது மார்க்கத்திற்காக உதவி தேடுகிறான். இவ்வாறே ஹழ்ரத் ஈஸா அலைஹிஸ்ஸலாமவர்கள் ஹவாரிய்யீன்களிடம் உதவி தேடுகின்றனர். இனி இறைவன் விரும்பியிருந்தால் எல்லா வகையான உதவிகளையும் அவன் எந்தவொரு வாஸிதாவு (இடைப்பொருளு)ம் இன்றி இறக்கியிருக்க முடியும். ஆனால் அவன் இப்பூவுலகை ஒரு காரணத்திற்குரிய உலகமாக படைத்திருப்பதால் அவன் ஒவ்வொன்றையும் ஒரு காரணத்தை கொண்டே வெளிப்படுத்துகிறான். இதை அவன் அடுத்த வசனத்தில் வெளிப்படுத்துவதை பாருங்கள்.

يايها الذين آمنوا ان تنصروا الله ينصركم ويثبت اقدامكم.

**"விசுவாசிகளே! நீங்கள் அல்லாஹ்வுக்(மார்க்கத்திற்)கு உதவி செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு உதவி செய்வான்.**

இன்னும் உங்களின் பாதங்களை ஸ்திரப்படுத்துவான்''
(சூரா - முஹம்மத், வசனம்-6.)

இந்த வசனத்தில் எவரிடமும் எந்தத் தேவையுமற்ற அல்லாஹ் முஃமின்களிடம் தனது மார்க்கத்திற்கு உதவி தேடுவதை பாருங்கள். இதன்மூலம் அவன் முஃமின்களுடைய தரத்தை உயர்த்துவதையும் பாருங்கள்.

قال ما مكني فيه ربي خير فاعينوني بقوة.

''எதன்மீது எனது ரட்சகன் எனக்கு வல்லமையை தந்துள்ளானோ அந்த வல்லமையை கொண்டு எனக்கு உதவி செய்யுங்களென்று (ஸிக்கந்தர் துல்கர்னைன்) கூறினார்''
(சூரா - கஹ்ஃப், வசனம்-95.

قال اجعلني على خزائن الارض اني حفيظ عليم.

''(யூஸுஃப் அலைஹிஸ்ஸலாமவர்கள்) சொன்னார்கள். என்னை பூமியுடைய செல்வங்களுக்கு அதிகாரியாக நியமனம் செய்யுங்கள். நிச்சயமாக நான் அறிபவனாகவும் பாதுகாப்பவனாகவும் இருக்கிறேன்'' (சூரா - யூஸுஃப், வசனம்-55.)

இந்த வசனத்தில் பூமியுடைய செல்வங்களின் அதிகாரியாக தன்னை நியமிக்க வேண்டுமென யூசுப் அலைஹிஸ்ஸலாமவர்கள் அல்லாஹ்விடம் கேட்கவில்லை. மாறாக அப்போதிருந்த அரசனிடம் கேட்கிறார்கள். இவ்வாறு கேட்டதால் யூசுப் அலைஹிஸ்ஸலாமவர்கள் ஷிர்க் செய்து விட்டார்களென்று யாராவது சொல்ல முடியுமா?

قال يايها الملؤ ايكم ياتيني بعرشها قبل ان يأتوني مسلمين.

''(சுலைமான் அலைஹிஸ்ஸலாமவர்கள்) சொன்னார்கள். சபையோரே! உங்களில் யார் அந்த சிம்மாசனத்தை அவர்கள் எனக்கு வழிப்பட்டவர்களாக எனது தர்பாருக்கு வந்து சேருமுன் கொண்டு வருபவர்கள்? (என்று கேட்டார்கள்)''
சூரா - நம்ல், வசனம்-38.)

## அண்ணால் நபியிடம் இஸ்த்திஆனத்

இது சம்பந்தமான ஹதீஸ்களை நாம் வரிசை படுத்தத் துவங்கினுல் அதுவே ஒருநூலாக விரிந்து விடுமாகையால் இங்கே ஒரேயொரு ஹதீஸை மட்டும் உங்களின் பார்வைக்கு தருகிறோம்.

عن ربيعة بن كعب قال كنت ابيت مع رسول الله صلى الله عليه وسلم فأتيته بوضوئه وحاجته فقال لي سل فقلت اسئلك مرافقتك فى الجنة قال او غير ذالك قلت هو ذاك قال فاعنى على نفسك بكثرة السجود.

"ஹழ்ரத் ரபீஆ ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர். நான் அண்ணால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடன் ஓரிரவு தங்கியிருந்தேன். அதுபோது நபியவர்கள் ஒழு செய்வதற்காக தண்ணீரும் வேறுசில அவசியத்திற்குரிய பொருட்களையும் (மிஸ்வாக் போன்றவை) அவர்கள் முன் கொண்டுவந்து வைத்தபோது, நபியவர்கள் என்னை நோக்கி; கேள் என்றனர். அதற்கு நான், உங்களுடன் சுவனத்தில் உங்களது தோழமையை கேட்கிறேன் என்றுசொல்ல, அதற்கு நபியவர்கள்; இன்னும் ஏதாவது என்று கேட்டனர். அதற்கு நான் என் விருப்பம் இதுமட்டுமே என்று சொல்ல, நபியவர்கள்; உமது நப்ஸின் மீது அதிகமான ஸுஜூதை கொண்டு எனக்கு உதவிசெய் என்றனர்" (நூல்: மிஷ்காத், பக்கம்-82.)

கவனியுங்கள். ஹழ்ரத் ரபீஆ ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அண்ணால் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களிடம் தான் விரும்புவதை கேட்கின்றனர். அதுகேட்ட நபியவர்களும் ரபீஆவை நோக்கி, நீர் என்னிடம் என்ன கேட்கிறீர் என்பது உமக்கு விளங்க வில்லையா? உமக்கு சுவர்க்கம் வேண்டுமெனில் அதை அல்லாஹ்விடமல்லவா கேட்க வேண்டும்? சுவர்க்கத்தை நான் எப்படித் தர முடியும்? என்றல்லவா சொல்லியிருக்க வேண்டும்! ஆனுல் அதற்கு மாருக நபியவர்கள் சுவர்க்கத்தை குறித்து வாக்குறுதியல்லவா

தருகின்றனர்! அத்துடன் அவரிடம் அதிகமான ஸுஜூதை கொண்டு எனக்கு உதவி செய்தால் உமக்கு சுவர்க்கத்தில் உமது நபியுடைய தோழமையும் கிடைக்கும் என்றல்லவா கூறுகின்றனர்! அவ்வாறுயின் நபியவர்களால் சுவர்க்கத்தை தர முடியுமென்பதை நாம் விளங்கிக்கொள்ள வேண்டும். அடுத்து அல்லாமா முல்லா அலி காரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இந்த ஹதீஸைபற்றி என்ன கூறுகிறார்களென்று பாருங்கள்.,,,

ويوخذ من اطلاقه عليه السلام الامر بالسؤال ان الله تعالى مكنه من اعطاء كل ما اراد من خزائن الحق (الى ان قال) وذكر ابن سبع في خصائصه وغيره ان الله تعالى اقطعه ارض الجنة يعطى منها ما شاء لمن شاء.

"அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பொதுவாகத்தான் கேட்கின்றனர். (மாறாக ஏதாவதொரு பொருளை குறிப்பிட்டு அதை மட்டும் கேள் என்று சொல்ல வில்லை) இதைகொண்டு நபியவர்களுக்கு அல்லாஹ் அவனுடைய கஜானாவிலிருந்து எதை வேண்டுமானாலும் கொடுப்பதற்குரிய அதிகாரத்தை தந்துள்ளான் என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம். இன்னும் இப்னு ஸப்உ போன்றோர் நபியவர்களின் தனித்தன்மை பற்றி கூறும்போது, அல்லாஹ் நபியவர்களுக்கு சுவர்க்கத்துடைய பூமியை ஜாகீராக ஆக்கித் தந்துள்ளானகையால் அதிலிருந்து நபியவர்கள் எதை யாருக்கு எவ்வளவு கொடுக்க வேண்டுமென்று விரும்புகிறார்களோ கொடுப்பார்கள் என்று கூறுகிறார்"

(நூல்: மிர்காத், பாகம்-2, பக்கம்-323.)

அடுத்து மேற்கண்ட ஹதீஸுக்கு அஹ்லெஹதீஸ் (வஹாபி) உலமாக்களில் பிரபலமானவரான நவாப் சித்தீக் ஹஸன்கான் போபாலி என்பவர் விளக்கம் தரும்போது, "நபியவர்கள் பொதுவாகவே கேள் என்றுதான் சொல்கின்றனரேயன்றி குறிப்பிட்ட எந்தவொரு பொருளையும் சுட்டிக்காட்டி கேள் என்று சொல்லவில்லையாதலால் இதைகொண்டு அனைத்து காரியங்களும் நபியவர்களின் திருக்கரத்தில் அவர்களின்

ஹிம்மத்தை கொண்டு அமைந்துள்ளது என்பதால் எதை யாருக்கு அவர்கள் விரும்புகிறார்களோ அதை அவர்கள் தனது இறைவனின் உத்திரவை கொண்டு அருள் புரிவார்கள்'' என்று கூறுகிறார். (நூல்: மிஸ்க்குல் கிதாம், பக்கம்-276)

இதுபோன்றே அல்லாமா அப்துல் ஹக் முஹத்திஸ் தெஹ்லவி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இமாம் பூஸிரி ரஹிமஹுல்லாஹ் அவர்களது புர்தாவின் ''ஃபஇன்ன மின் ஜூதிக்கத் துன்யா வழர்ரதஹா வமின் உலூமிக்க இல்மல் லவ்ஹி வல்கலமி'' என்னும் கவிதைக்கு விளக்கமளிக்கும் போது, ''யா ரஸூலெல்லாஹ்! இம்மையும் மறுமையும் தங்களது பேரருளின் ஒரு பகுதியாகும். இவ்வாறே லவ்ஹும் கலமும் உங்களது கல்வியின் ஒரு பகுதியாகும். ஆகையால் (மனிதனுகிய) நீ இம்மை மறுமையின் பேற்றை விரும்பினுல் நபியவர்களின் சன்னிதானத்திற்கு வா! உனக்கு தேவை யானதை கேள்என்று கூறுகின்றனர்''

(நூல்: அஷ்அத்துல் லம்ஆத், பாகம்-1, பக்கம்-396)

ஆகையால் இதுவரை நாம் மேலே சுட்டிக்காட்டிய திருக் குர்ஆனின் வசனங்களேயும் திருநபியவர்களின் ஹதீஸ்களேயும் உங்களது கவனத்தில் வைத்துக் கொண்டவர்களாக இப்போது மனித உணர்வுகளின் தாக்கத்தால் செயல்படும் அறிவுடைய தூண்டுதலால் எழுகின்ற எதிர் வாதத்தையும் பாருங்கள். சிலருடைய நாவு எத்தனே தூரம் எல்லே கடந்து போய்விடுகிறது என்பதை பாருங்கள். வஹாபியக் கொள்கையுடைய இஹ்ஸான் இலாஹி ஜஹீர் என்பார் தமது ''அல்பரேலவிய்யா'' என்னும் நூலில் 63ம் பக்கத்தில் கீழ்கண்டவாறு எழுதுகிறார்,...

''அல்லாஹ் தனது வேதத்தில் பல்வேறு நபிமார்களே பற்றியும் ஸாலிஹீன்களான நல்லடியார்களே பற்றியும் பேசு கிறான். அவர்கள் வாழுகின்ற காலத்தில் அவர்களுக்கும் சோதனேகள் துன்பங்கள் போன்றவை ஏற்பட்ட போது அவர்களுக்கும் உதவி ஒத்தாசை மற்றும் அடுத்தவர்களின் பிரார்த்தனே போன்றவைகளுக்குரிய அவசியம் நேர்ந்துள்ளன.

இருப்பினும் அவர்களில் ஆதமிலிருந்து நூஹ் வரை, இப்றாஹீமிலிருந்து மூஸா வரை, யூனுஸிலிருந்து அஷ்ரபுல் முர்ஸலீன் முஹம்மத் பின் அப்துல்லாஹ் ஸலவாத்துல்லாஹி வஸலாமுஹூ அலைஹிம் அஜ்மயீன் வரை யாருமே அல்லாஹ்வையன்றி வேறு யாரிடத்திலும் உதவி தேடவில்லை. அல்லது உதவிக்காக அவர்கள் யாரையும் அழைக்கவில்லை. அது பாவமன்னிப்புக்குரிய விஷயமாக இருந்தாலும் சரி. அல்லது ஒரு குழந்தையை குறித்ததாகவோ, அல்லது ஒரு வியாதியிலிருந்து சுகம் பெறுவதற்குரியதாகவோ, அல்லது ஒரு அழிவிலிருந்து தப்புவதற்குரியதாகவோ, அல்லது வறுமையை நீக்குவதற்குரியதாகவோ, அல்லது சிறை கூடத்திலிருந்து விடுதலை பெறுவதற்குரியதாகவோ, அல்லது வேறு எந்த மாதிரியான உதவியாக இருந்த போதிலும் சரியே. அவர்கள் அல்லாஹ்விடம் மட்டுமே பிரார்த்தித்தார்கள். உதவி தேடினுர்கள். அதற்கு மாருக அவர்களில் எவரேனும் அல்லாஹ்வையன்றி அல்லாஹ்வுக்கு நெருக்கமான அடியார்களிடமோ அல்லது அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்பட்ட அவ்லியாக்களிடமோ உதவி தேடினுர்கள் என்பதற்குரிய எந்தவொரு ஆதாரமும் நமக்கு குர்ஆனிலோ அல்லது ஹதீஸிலோ காணக் கிடைக்கவில்லை''

மீண்டும் ஒருமுறை நாம் மேலே கூறியுள்ள திருக்குர் ஆனின் வசனங்களையும் திரு நபியவர்களின் ஹதீஸ்களையும் கவனமாக படித்துப் பாருங்கள். ஏனெனில் மேற்கண்ட இஹ்ஸான் இலாஹியின் கூற்றில் எவ்வளவு தான் உண்மைக்குரிய எதார்த்தத்தை நாம் தேடிய போதிலும் அதை கொஞ்சங் கூட பார்க்க முடியவில்லை. இனி நபிமார்கள் என்போர் எப்படிப்பட்டவர்கள் எனில் அவர்களுடைய வஸீலாவை கொண்டுதான் நாமே நமது கோரிக்கைகளை இறைவனிடம் எடுத்துச் சொல்கிறோம். இந்நிலையில் அவர்கள் இறை சன்னிதானத்தில் இறைவனுக்கு நெருக்கமானவர்களாக இருப்பதால் அவர்கள் எதையாவது கேட்பதாக இருந்தால் நேரடியாக கேட்கலாமென்னும் போது அவர்களுக்கு வஸீலாவுக்குரிய

அவசியமென்ன?

## நவாப் வஹீதுஸ்ஸமானும் இஸ்த்திஆனத்தும்

இவர் அஹ்லெ ஹதீஸ்களாகிய கைரெ முகல்லிதீன்களின் மிகப்பெரும் ஆலிமும் ஸிஹாஹ் ஸித்தா என்னும் ஆறு ஹதீஸுக்குரிய கிரந்தங்களையும் மொழி பெயர்த்தவராவார். இவர் தமது ''ஹத்யத்துல் மஹ்தி'' என்னும் நூலில் ''இஸ்த்தி ஆனத்தை'' குறித்து மிகவும் விரிவாக எழுதியிருக்கிறார். அதிலிருந்து சிலவற்றை உங்களின் பார்வைக்கு தருகிறோம்.

والحاصل ان كل من اعتقد في حق غير الله سواء كان حيا او ميتا ان له قدرة ذاتية او موهوبة مفوضة من الله عز وجل على امر من الامور بحيث لا يحتاج فيها الى اذن جديد منه فهو مشرك وكل من يفهم غير الله انه عاجز بالكلية كالميت فى يد الغسال لا يقدر على شيئ الا اذا اراد الله سبحانه وبغى ان يأخذ هذا العمل منه فيعمل بحكم الله واذنه وارادته وقضائه وينصر ويغيث وينفع ويضر كذالك فهو موحد ليس بمشرك سواء كان ذالك الغير حيا او ميتا كمن فهم ان السقمونيا مسهل بذاته او النار محرقة بذاتها فقد اشرك ومن علم ان اسهال السقمونيا واحراق النار بامر الله واذنه وارادته فهو موحد ليس بمشرك.

''அல்லாஹ் அல்லாத சிருஷ்டிப்பொருள் என்பது அது உயிரோடு இருந்தாலும் சரி. அல்லது இறந்து போயிருந்தாலும் சரி. அதைபற்றி ஒருவர், அதற்கு சுயமான தத்துவம் உண்டு என்றோ அல்லது அதற்கு அல்லாஹ் ஒரு விஷயத்தில் எப்படிப் பட்ட தத்துவத்தை தந்துள்ளான் எனில் அதை செயல்படுத்து வதற்கு மீண்டும் அதற்கு இறைவனுடைய அனுமதி தேவை யில்லை என்றோ நம்புவாறாயின் அவன் முஷ்ரிக்காகும்.

அவ்வாறின்றி வேறொருவர், அல்லாஹ் அல்லாத ஒரு பொருளை பலவீனமானதென்று நம்புகிறார். எவ்வாறெனில் அப்பொருள் குளிப்பாட்டுகிறவரின் கையிலுள்ள மையித்தை

போல அது எந்தவொரு பொருளின் மீதும் சுயமான தத்துவமு-டையதல்ல என்பதாக நம்புகிறான். அதேநேரம் அல்லாஹ் அவனை கொண்டு ஒரு காரியத்தை செய்ய வேண்டுமென்று நாடுவானேயாயின் அவன் அல்லாஹ்வுடைய உத்திரவை கொண்டும் அனுமதியை கொண்டும் நாட்டத்தை கொண்டும் உதவி செய்வான் என்றும் ஒருவனுக்கு லாபத்தையோ அல்லது நஷ்டத்தையோ அவனால் ஏற்படுத்த முடியுமென்றும் நம்புவானேயாயின் அவன் முவஹ்ஹிதாகும். முஷ்ரிக்கல்ல. இந்நிலையில் உதவுகின்ற அவன் உயிரோடு இருந்தாலும் சரி. அல்லது இறந்து போயிருந்தாலும் சரி.

அதாவது இதனை இன்னும் கொஞ்சம் விளக்கமாக சொல்வதாயின் ஒருவன் ஒருஊள் தானாக உருவாகிறதென்றோ, அல்லது நெருப்பு தானாக எரிகிறதென்றோ நம்புவானாயின் அவன் முஷ்ரிக்காகும். அவ்வாறின்றி ஒருஊள் உருவாவதும் நெருப்பு எரிவதும் அல்லாஹ்வுடைய கட்டளை மற்றும் நாட்டத்தை கொண்டு என நம்புவானாயின் அவன்தான் முவஹ்ஹிதாகும்'' (நூல்: ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-17)

இதே கொள்கையை தான் முன்னால் நாம் இமாம் அஹ்மத் ரஜா பாழில் பரேலவி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் நூலாகிய பரகாத்துல் இஸ்த்திம்தாத் என்பதிலிருந்து, ஒரு சிருஷ்டிப் பொருளை சுயமாக லாப நஷ்டத்தை தரக்கூடியது என நம்புதல் ஷிர்க்காகும் என்றும் அவ்வாறின்றி அப்பொருள் இறையருளை கொண்டு லாப நஷ்டத்தை ஏற்படுத்த முடியுமென்று நம்புதல் ஷிர்க்காகாது என்றும் கூறியிருப்பதை பார்க்க வேண்டுகிறோம்.

இனி அல்லாமா காழி ஷவ்கானி என்பார் கூறுவதை பாருங்கள்.

ان من اعتقد فی میت من الاموات او حی من الاحیاء انه ینفعه او یضره استقلالا او مع الله او ناداه او توجه الیه او استغاث به فی امر من الامور التی لا یقدر علیه المخلوق فلم یخلص التوحید بعد ولا افرده بالعبادة.

“ஒருவன் உயிரோடுள்ள அல்லது இறந்து போய்விட்ட ஒருவனை சுயமாகவோ அல்லது அல்லாஹ்வுடன் இணைத்தோ ஒருவனுக்கு லாப நஷ்டத்தை ஏற்படுத்த முடியுமென்று நம்பிய நிலையில் அவனை நோக்கி தனது முகத்தை திருப்பு வானேயாயின் அல்லது அவனது சக்திக்கு மீறிய ஒருபொருளை அவனிடம் கேட்பானுயின் அவனுடைய தௌஹீத் சுத்தமான தல்ல. அத்துடன் அவன் அல்லாஹ்வை மட்டுமே வணங்குப வனுகவும் ஆக மாட்டான்”

(நூல்: ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-19)

காழி ஷவ்கானியின் மேற்கண்ட கூற்றைகொண்டு ஷிர்க் என்பது மூன்று வகையான நிலைகளில் உருவாகிறதென தெளிவாகிறது. அதாவது,...

1) எவரையேனும் லாப நஷ்டத்தை ஏற்படுத்துவதில் சுயார்த்தமுடையவர் என நம்புதல்.

2) எவரையேனும் லாப நஷ்டத்தை ஏற்படுத்துவதில் இறைவனுடைய கூட்டாளி என நம்புதல்.

3) ஒரு சிருஷ்டியின் சக்திக்கு அப்பாற்பட்ட பொருளை அந்த சிருஷ்டியிடம் கேட்குதல்.

இனி அஹ்லுஸ்ஸுன்னத் வல் ஜமாஅத்தின் கொள்கை இது விஷயத்தில் எவ்வாறு அமைந்துள்ளது என்பதைப் பாருங்கள். லாபமோ நஷ்டமோ எதுவாக இருந்தாலும் அது இறைவனுடைய தரப்பிலிருந்தே நிகழுகிறது. அடுத்து சிருஷ்டி என்பது இறைவனுக்கும் உதவி தேடுபவனுக்கும் இடையில் நிறுத்தப்படும் ஒரு வாஸிதாவாக - வஸீலாவாக மட்டுமே இருப்பதால் இந்நிலையில் ஷிர்க் என்பது எப்படி நிகழும்?

இதைத்தான் நவாப் வஹீதுஸ்ஸமானும் காழி ஷவ்கானியும், இறைவனல்லாத ஒருபொருள் லாபத்தையோ அல்லது நஷ்டத்தையோ எப்படிப்பட்ட நிலையில் ஏற்படுத்த முடியு மெனில், ஒன்று அது சுயார்த்தமுடையதென்ருே அல்லது அது இறைவனோடு கூட்டு சேர்ந்துள்ளதென்ருே நம்பும்

போது தான் அது ஷிர்க்காகும். இதுபோன்றே இறைவன
லாதவரை அழைப்பதும் அவரை நோக்கி முகத்தை திருப்பு
வதும் அவரிடம் உதவி தேடுவதும் எப்போது ஷிர்க்காகும்
எனில் அவருடைய சக்திக்கு அப்பாற்பட்ட ஒன்றை கேட்கும்
போதுதான் என்றும் கூறுகிறுர்.

يعلم بداهة ان النداء او التوجه او الاستغاثة فى امور يقدر عليها
المخلوق او اعتقاد النفع والضرر لغير الله باذن الله وحكمه وارادته
ليس بشرك اكبر.

''இனி ஒருபொருள் ஒரு சிருஷ்டியின் சக்திக்கு உட்பட்ட
நிலையிலுள்ள போது அப்பொருளை குறித்து அவரிடம் கேட்பதோ
அதற்காக அவரை அழைப்பதோ அவரை நோக்கி முகத்தை
திருப்புவதோ அவரும் இறைவனுடைய உத்திரவை கொண்டும்
நாட்டத்தை கொண்டும் லாப நஷ்டத்தை ஏற்படுத்துவார்
என்று நம்புவதோ ஷிர்க்காகாது''

(நூல்: ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-20)

பின்னும் இக்காலத்தை சேர்ந்த நவீனவாதிகளாகிய இந்த
முப்ததியீன்களுக்கு என்னவென்று சொல்லி புரியவைப்பது?
எந்தவொரு முஸ்லிமும் நபிமார்களிடமோ வலிமார்களிடமோ
உதவி தேடும்போது அவர்களின் சக்திக்கு அப்பாற்பட்ட
எதையும் அவர்களிடம் கேட்பதில்லை. அத்துடன் அவர்கள்
சுயமாக லாப நஷ்டத்தை ஏற்படுத்த முடியுமென்றும் நம்புவ
தில்லை. இது இந்த வஹாபிகளின் சந்தேகத்திலிருந்து ஜனித்த
குழந்தையாகும். இன்னும் இதுபற்றி அல்லாமா தகிய்யுத்தீன்
சுப்கீ ரஹிமஹுல்லாஹ் அவர்கள் சொல்வதை பாருங்கள்,...

وليس المراد نسبة النبى صلى الله عليه وسلم الى الخلق والاسقلال
بالافعال هذا لا يقصده مسلم فصرف الكلام اليه ومنعه من باب
التلبيس فى الدين والتشويش على عوام الموحدين.

''நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒரு
செயலை படைப்பவர்கள் என்பதோ அல்லது அதில் அவர்கள்

சுயமான தத்துவமுடையவர்கள் என்பதோ நமது கருத்தல்ல. இப்படி எந்த முஸ்லிமும் சொல்வதுமில்லை நினைப்பதுமில்லை. இனி இவ்வாறு கருத்து கொள்வதும் இதையே காரணமாக்கி நபிமார்களிடமும் வலிமார்களிடமும் கேட்கக் கூடாதென்று சொல்வதும் இஸ்லாத்தை திசை திருப்புகின்ற வேலையாகும். அத்துடன் இது பாமரர்களாகிய ஏகத்துவவாதிகளை குழப்புவதுமாகும்'' (நூல்: ஷிஃபாவுஸ் ஸகாம், பக்கம்-175)

அடுத்து நவாப் வஹீதுஸ்ஸமான் (அஹ்லெ ஹதீஸின் ஆலிம்) மேற்கண்ட இஸ்த்திஃகாதா (உதவி தேடுதல்) ஷிர்க்காகாது என்பதை ஆதாரப்படுத்தும் வகையில்,...

''ஜாமிவுல் பயானுடைய ஆசிரியர் தமது தப்ஸீரின் துவக்கத்தில் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் உதவி தேடுகிறார். இந்நிலையில் பொதுவாக அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடுதல் என்பது ஷிர்க்கென்று இருக்குமாயின் மேற்படி ஆசிரியரை நாம் முஷ்ரிக்கென்று சொல்லவேண்டி வரும். அப்படியானால் அவருடைய தப்ஸீரை நாம் எவ்வாறு ஏற்க முடியும்? ஆனால் அதேநேரம் எல்லா அஹ்லெ ஹதீஸ்வாதிகளும் அவருடைய தப்ஸீரை ஏற்றுக் கொண்டுள்ளனர்'' அதுமட்டுமின்றி அல்லாமா (சித்தீக் ஹஸன் கான் போபாலி) அவர்களும் தமது கவிதையொன்றில் ,...

يا سيدى يا عروتى ووسيلتى     يا عدتى فى شدة ورخاء

قد جئت بابك ضارعا متضرعا     متاوها بتنفس صعداء

مالى ورائك مستغاث فارحمن     يا رحمة للعالمين بكائى

**''எனது தலைவரே! எனது ஆதரவே! என்னுடைய வஸீலாவே! இன்பத்திலும் துன்பத்திலும் எனக்கு உதவுகின்றவரே!**

**நான் உமது வாயிலுக்கு வந்திருக்கிறேன். நான் கேவலமான நிலையிலிருக்கிறேன். தேம்பித் தேம்பி அழுகிறேன். நொந்து போயிருக்கிறேன். என் மூச்செல்லாம் விரிந்து போய் விட்டது.**

**உம்மைத் தவிர எனக்கு வேறு யாருமில்லை. யாரிடம் நா உதவி தேடுவேன். ஏ! ரஹ்மத்துல் லில் ஆலமீனே! என்னு டைய இழிந்த நிலைமீது இரக்கம் காட்டுங்கள்''**

என்றும் பாடுகிறார். ஒருவேளை இதை பாடியவருடைய பெயன சொல்லாமல் இன்று நம்மிடையேயுள்ள வஹாபிகளிட இக்கவிதைகளை நாம் சொல்லிக் காட்டுவோமாயின் உடனே அவர்கள் கொஞ்சங்கூட தாமதிக்காமல், இக்கவிதை ஷிர் மற்றும் குப்ரு என்றுகூறி பத்வா கொடுத்திருப்பார்கள். அது மட்டுமின்றி இக்கவிதையை பாடியவர் அறியாமை காலத்தை சேர்ந்த முஷ்ரிக்குகளை விட, மக்காவிலிருந்த விக்ரஹ ஆராதனை காரர்களை விட ஷிர்க்கில் எல்லை கடந்தவரென்றும் கண்டிப்பா சொல்லியிருப்பார்கள். அதேநேரம் இக்கவிதையை பாடியவ தங்களால் மிக உயர்வாக மதிக்கப்படும் நவாப் போபால அவர்கள் தானென்பதை நாம் ஆதாரத்துடன் எடுத்துக் காட்டு வோமாயின் உடனே பத்வா எழுதும் அவர்களுடைய பேனாவிலுள்ள மை தீர்ந்து விடும். இதுதான் இறைவன் மற்றும் மறுமை மீதுள்ள பயமற்ற நிலையை கொண்ட இவ களது வருத்தத்திற்குரிய ஓர் நிலையாகும். மேலும் இதைபற்ற நாம் எவ்வளவு தான் எடுத்துச் சொன்னாலும் அது செவிடன் காதில் ஊதிய சங்குதான் என்பதில் நமக்கு கொஞ்சமும் சந்தேகமில்லை.

அடுத்து இந்த வஹாபிகள் இறந்து பலகாலமாகி விட்ட இவர்களுடைய முன்னோர்களிடம் எப்படியெல்லாம் உதவி ஒத்தாசை தேடுகிறார்களென்று பாருங்கள்.

**''கிப்லயே தீன் மததே! கஃபயே ஈமான் மததே!**
**இப்னு கையிம் மததே! காழி ஷவ்கான் மததே!''**

**(நூல்: ஹாஷியா ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-23)**

அல்லாஹு அக்பர்! பார்த்தீர்களா! சுன்னத் வல் ஜமா அத்தை சார்ந்தவர்கள் யாஅலீ, யாகௌஸ், யாகாஜா என்று சொல்லி விட்டால் போதும். உடனே அவர்கள்மீது குப்ரு என்றும் ஷிர்க் என்றும் பத்வா தந்து விடுவார்கள். ஆனால்

அதையே இவர்கள் செய்தால் அதனுடைய தீர்ப்பு வேறு மாதிரியாகி விடும். இன்னும் இந்த இஹ்ஸான் இலாஹி சொல் வதை பாருங்கள்,...

“பரேலிகளின் எல்லை மீறிய கொள்கையில் ஒரு கேலிக் குரிய கொள்கையானது, பல நகரங்களில் மத்தியத்தர நிலையை சேர்ந்த சூஃபிகளிடம் இக்கொள்கைகளை நாம் பார்க்கலாம். இவைகள் இஸ்லாத்தின் பெயரால் சிலைகளை வணங்குகின்றவர் களிடமிருந்தும் கிறிஸ்தவர்களிடமிருந்தும் யூதர்களிடமி ருந்தும் முஷ்ரிக்குகளிடமிருந்தும் இஸ்லாமிய மக்களிடையே கொண்டுவந்து நுழைக்கப்பட்டவைகளாகும். இதை முஸ்லிம் களிடையே உள்ள முஜத்திதுகள் பல்வேறு கோணங்களில் பலவாறுக இவைகளை எதிர்த்து போராடியுள்ளனர். அக்கொள் கைகளில் சில அறியாமை காலத்திலும் இருந்தன. அப்போது குர்ஆனும் குர்ஆனை உடையவர்களும் அவைகளை எதிர்த்து போராடினார்கள். இருப்பினும் அவைகளெல்லாம் இன்று இஸ்லாத்தின் அடிப்படை கொள்கைகளாக மாறிப்போய் விட்டன. அதிலொன்று இறைவனல்லாதவர்களிடம் உதவி தேடுவதை உதாரணமாக சொல்லலாம்”

(நூல்: அல் பரேலவிய்யா, பக்கம்-55)

இனி யார் உலகிலுள்ள அனைத்து முஸ்லிம்களையும் காபிரென்றும் முஷ்ரிக்கென்றும் சொல்வதற்கு கொஞ்சங்கூட வெட்கப்படவில்லையோ அவர்கள் நம்மைபற்றி கூறுவதை கேட்டு நாம் சங்கடப்பட வேண்டியதில்லை. ஆனால் அதே நேரம் அவர்கள் தருகின்ற பத்வாவில் கொஞ்சத்தை நவாப் வஹீதுஸ்ஸமான், நவாப் சித்தீக் ஹஸன்கான் போபாலி மற்றும் அவர்களை பின்பற்றுவோர்களுக்கும் பங்குவைத்து கொடுத்தால் நலமாக இருக்குமென்று நினைக்கிறேம். ஏனெனில் இவர்கள் முதலில் அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவி தேடுவதை ஜாயிஸென்று கூறுகின்றனர். அதன்பின் இவர்களே அல்லாஹ் அல்லாதவர்களிடம் உதவியும் தேடுகின்றனர். ஆனால் இவர்கள் தமது பத்வாவை இவர்களை நோக்கி திருப்ப

மாட்டார்களென்று நமக்கு நிச்சயமாகத் தெரியும். ஏனெனில் குப்ரு மற்றும் ஷிர்க்குடைய பத்வா என்பது பாமர முஸ்லிம்களுக்குரியதே அன்றி இவர்களின் தலைவர்களுக்குரியதல்ல.

இன்னும் இத்தலைப்பில் நவாப் வஹீதுஸ்ஸமான் பல அத்தியாயங்களை தொகுத்துள்ளார். அதிலொன்று, படைப்புக்களின் சக்திக்கு உட்பட்ட காரியங்களில் அவைகளிடம் உதவி தேடுவது ஆகுமான ஒன்றெனில் நபிமார்களிடமும் ஷுஹதாக்களிடமும் ஸாலிஹீன்களிடமும் அவர்கள் வாழும் காலத்தில் எதையெல்லாம் அவர்களிடம் கேட்கப்பட்டதோ அதையெல்லாம் அவர்களின் மறைவுக்குப் பின்னரும் அவர்களிடம் கேட்கலாம். உதாரணமாக இறைவனிடம் துஆ செய்யச் சொல்வதும் இன்னும் இதுபோன்ற மற்றவைகளுமாகும்.

ஆனால் இவ்வாறு கேட்பது கூடாதென்றும் பித்அத்தென்றும் இப்னு தைமிய்யா, இப்னு கையிம், காழி ஷவ்கானி போன்றோர் கூறுகின்றனர். இதைபற்றி இப்னு கையிம் சொல்லும்போது, ஒருவர் இறந்துபோய் விட்டால் அத்துடன் அவரது செயல்பாடுகளனைத்தும் துண்டிக்கப்பட்டுப் போய் விடுகின்றன. ஆதலால் இப்போது அவர் தனக்கே எந்தவொரு லாபத்தையும் நஷ்டத்தையும் செய்துகொள்ள முடியாத போது அவரிடம் கேட்போருக்கு அவரால் எவ்வாறு உதவ முடியுமென்று கேட்டுவிட்டு தனது கொள்கைக்கு மாற்றமானவர்களை குறித்து கீழ்கண்டவாறு எழுதுகிறார்,...

**“(இறந்தோரிடம் கேட்பதை) ஆகுமானதென்று சொல்லக் கூடியவர்கள் இமாம் சுப்கீ, இமாம் இப்னு ஹஜர் மக்கீ, அல்லாமா கஸ்த்தலானி போன்றோரும் மற்றுமுள்ள பெரும்பான்மையான ஷாபிய்யாக்களுமேயாகும். இவ்விஷயத்தில் உயிரோடு இருப்பவர்களும் இறந்தவர்களை போன்றவர்கள் தானென்று இவர்கள் கூறுகின்றனர். அதாவது, இறைவன் தனது வேதத்தில், “குல் லா அம்லிகு லி நப்ஸீ நஃப்அன் வலா ழர்ரன்” என்பதாகக் கூறுகிறான். அதாவது, எவ்வாறு உயிரோடிருப்பவர் இறைவனுடைய கட்டளை, திருப்தி, பொருத்தம்**

நாட்டம் மற்றும் தத்துவமின்றி ஒரு காரியத்தை செய்ய முடியாதோ அவ்வாறே இறந்து போனவரும் இருக்கிருர். பின்னும் இறப்பை கொண்டு இறந்தவரின் செயல்பாடுகள ஊத்தும் துண்டிக்கப்பட்டு போய் விடுவதால் அவருக்குள் செயல்பாடே நிகழ முடியாதென்றும் சொல்ல முடியாது. ஏனெனில் வானவர்களின் செயல்பாடுகளும் இதுபோன்றே துண்டிக்கப்பட்டுப் போய் தானுள்ளன. ஆனுல் இறைவன் அவர்களுக்கு கட்டளேயிட்டால் எதைகுறித்து கட்டளேயிடப் படுகிறதோ அதை அவர்கள் செயல்படுத்துவார்கள்.

மேலும் நான் ஒருமுறை கனவில் ஹழ்ரத் ஹஸன் பின் அலியை கண்டேன். அவர்கள் ஜமாஅத்தாக தொழுகை நடத்திக் கொண்டிருந்தனர். நானும் அவர்களுக்கு பின்னுல் தொழுதேன். அதன்பின் அவர்களிடம், நீங்கள் இங்கே எவ்வாறு தொழுகிறீர்கள்? பர்ஸகுடைய உலகமாகிய இங்கே தொழுகை என்பது கடமையில்லேயே! எனக்கேட்க, அதற்க வர்கள்; இங்கே தொழுகை கடமையில்லே தான். இருப்பினும் வலிமார்கள் நபிலுடைய எண்ணத்தில் இறைவனுடைய சமீபத்துவத்தை பெறுவதற்காகவும் அவனுடைய வணக் கத்தை கொண்டு இன்பத்தையும் சந்தோஷத்தையும் பெற்றுக் கொள்வதற்காகவும் இங்கே தொழுகின்றனரென்று கூறினர்.

அவர்கள் சொன்னதை கேட்டு எனக்கு நபியவர்களின் ஹதீஸொன்று ஞாபகத்திற்கு வந்தது. அதாவது, ஹழ்ரத் மூஸா அலேஹிஸ்ஸலாமவர்கள் தமது கப்ரில் தொழுது கொண்டி ருப்பதை நான் பார்த்தேன் என்று சொன்னதாகும். அதுசரி. தொழுகையும் பிரார்த்தனேக்குரிய வகையை சேர்ந்தது தானே. இதுபோன்றே இன்னெரு ஹதீஸில் நபியவர்கள், நான் மூஸா அலேஹிஸ்ஸலாமவர்களே கண்டபோது அவர்கள் சப்தமிட்டு தல்பிய்யா ஓதியவர்களாக தம்மிறைவனே சமீபித்துக் கொண்டி ருந்ததை பார்த்தேன் என்பதாகும். மேலும் அல்லாமா தீபி என்பார் கூறுகின்றனர். நபிமார்கள், பிரார்த்தனேயை கொண்டு இறைவனே சமீபித்தல் என்பது அவர்களுக்கு சாத்தியமில்லாத

ஒன்றல்ல. ஏனெனில் அவர்கள் ஷுஹதாக்களை விட மேன்மை யானவர்களாகும். அத்துடன் மறுமை என்பது துன்பத்தை அனுபவிக்கக் கூடிய இடமல்ல என்றும் கூறுகின்றனர்.

எனவே ஸியாரத்துச் செய்வோருக்காக இறந்து போன வர்கள் பிரார்த்தனை செய்வதற்கு என்ன தடை இருக்க முடியும்? ஆனால் இந்த இடத்தில் கேள்வி இறந்தோரை பற்றியதல்ல, மாறாக வலிமார்களை குறித்த விஷயமாகும். அத்துடன் ஆன்மாக்கள் என்பது மரணத்தின் ருசியை அனுபவிப்பது மில்லை. அதனால் அழிந்து போவதுமில்லை. அதேநேரம் அவைகளின் உணர்வும் அறிவும் அப்படியே தான் இருக் கின்றன. குறிப்பாக நபிமார்கள் ஷுஹதாக்கள் போன்றோரது விஷயத்தில் குர்ஆன் ஹதீஸுடைய தெளிவான ஆதாரங்களை கொண்டு அவர்கள் உயிரோடு இருப்பவர்களின் படித்தரத்தில் இருக்கின்றனர். ஆகையால் அவர்களுடைய கப்ருகளுக்கு சென்று கண்டிப்பாக உதவி தேடப்பட்டாக வேண்டும் எனக் கூறுதல் எப்படி சரியாகும்? காரணம் இவர்கள் தாம் வாழுகின்ற காலத்திலேயே தூரத்திலுள்ள செய்திகளை கேட்க முடியாத போது இறப்புக்குப் பின்னால் மட்டும் எப்படி கேட்க முடியும்?'' என்று கேட்கிறார்.

இது சம்பந்தமான ஒரு ஹதீஸை நாம் முன்னால் குறிப்பிட் டிருக்கிறோம். அதாவது, ஒரு அடியான் அதிகமதிகம் நபிலான வணக்கங்களை கொண்டு எப்படிப்பட்ட படித்தரத்தை எய்தி விடுகிறானெனில் அவனுடைய ஒவ்வொரு உறுப்பும் இறைவன் தஜல்லியாகும் மழ்ஹராகவே மாறிப்போய் விடுகின்றன என்பதாம். அத்துடன் இந்த ஹதீஸுக்கு இமாம் பக்ருத்தீன் ராஜி ரஹிமஹுல்லாஹ் அவர்கள், அடியான் அவ்வுயர் நிலையை பெற்றுக் கொள்ளும்போது சமீபத்திலுள்ள வைகளையும் தொலைவிலுள்ளவைகளையும் பார்க்கவும் கேட் கவும் செய்கிறான். ஆனால் தன் அறிவுக்குப் பின்னால் ஓடிக் கொண்டிருப்போருக்கு இதோர் ஆச்சரியமான விஷயம்தான். இருப்பினும் இறைவனால் இவ்வுயர் நிலை கொடுக்கப்படும்

அடியார்களுக்கு தொலைவிலுள்ள பொருட்களையோ செய்திகளையோ பார்ப்பதும் கேட்பதும் சிரமமான ஒரு காரியமல்ல எனக் கூறுகின்றனர்.

மேலும் இஸ்த்திஆனத்தை மறுப்போரிடம் அது ஆகுமான ஒன்றுதான் என்பதை உறுதிப்படுத்துவதற்காக குர்ஆன் ஹதீஸிலிருந்து அதற்குரிய ஆதாரத்தை நாம் எடுத்துக் காட்டினால் அதற்கவர்கள், இது உயிரோடிருப்போர் சம்பந்தமான விஷயமாகும். இதைத்தான் நாங்களும் ஏற்றுக் கொள்கிறோமே! இனி நாங்கள் ஷிர்க்கென்று சொல்வதெல்லாம் இறந்து போனவர்களிடம் உதவி தேடுவதை பற்றித்தான் என்கின்றனர். இக்கருத்தை மறுத்து இவர்களின் உலமாக்களில் ஒருவரான நவாப் சித்தீக் ஹஸன்கான் என்பவர் சொல்கிறார்,...

"ஒரு ஆச்சரியமான விஷயம் என்னவெனில் நமது சகோதரர்களில் சிலர் இஸ்த்திஆனத் என்னும் உதவி தேடுதல் சம்பந்தமான விஷயத்தில் உயிரோடிருப்போர் இறந்து போனவர் என்பதாக பிரிக்கின்றனர். இதில் உயிரோடிருப்பவரிடம் அவரது சக்திக்குட்பட்ட எதையெல்லாம் கேட்கப் படுமோ அதெல்லாம் ஷிர்க்காகாது என்றும், ஆனால் அதையே இறந்து போனவரிடம் கேட்பது தான் ஷிர்க்காகும் என்றும் அவர்கள் தவறாக எண்ணிக் கொண்டிருக்கின்றனர். இது பகிரங்கமான வழிகேடாகும். ஏனெனில் அல்லாஹ் அல்லாதவை என்று வரும்போது உயிரோடு இருப்பதோ அல்லது இறந்து போனதோ இரண்டுமே சமம்தான். இவ்விஷயத்தில் அதிகமாக சொல்வதாயின் இறந்து போனோரிடம் உதவி தேடுவதென்பது உயிரோடிருப்பவர்களை இறந்தோருக்கு இணையாக்குவதென்று வேண்டுமானால் சொல்லலாம். மற்றபடி இது அல்லாஹ்வுக்கு இணை வைப்பதாகாது"

இதே கொள்கையைத் தான் இமாம் அஹ்மத் ரஜா பாழில் பரேலவி அவர்களும், ஷிர்க் என்பது யாரோடு வைக்கப்பட்டாலும் ஷிர்க் தான் என்றும், அவ்வாறின்றி ஒருவருடைய விஷயத்தில் மட்டும் ஷிர்க்காகாது எனில் அந்நிலையில் அது

யாருடைய விஷயத்திலும் ஷிர்க்காக முடியாது என்றும் கூறுகின்றனர். கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். அல்லாஹ்வுக்கு இறந்தோர் இணையாக மாட்டார்கள் என்றால் உயிரோடிருப்போர் மட்டும் இணையாவார்களா? இவ்வாறே தூரத்திலிருப்போர் இணையாக மாட்டார்கள் என்றால் சமீபத்திலிருப்போர் மட்டும் இணையாவார்களா? நபிமார்கள் இணையாக மாட்டார்கள் என்றால் மருத்துவர்கள் மட்டும் இணையாவார்களா? மனிதன் இணையாக மாட்டான் என்றால் மலக்குகள் இணையாவார்களா? ஆனால் உண்மைநிலை என்னவெனில் அல்லாஹ்வுக்கு யாருமே இணையாக மாட்டார்கள் என்பதுதான் சத்தியமாகும்.

## ஒரு காட்டரபியின் இஸ்த்திஃகாதா

ولو انهم اذ ظلموا انفسهم جاءوك فاستغفروا الله واستغفر لهم الرسول لوجدوا الله توابا رحيما.

“ஹழ்ரத் உத்பா என்பவர் கூறுகிறார். நான் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழாவுக்கு பக்கத்தில் அமர்ந்திருந்தேன். அப்போது ஒரு காட்டரபி வந்தார். வந்தவர் நபியவர்களை நோக்கி, அஸ்ஸலாமு அலைக்க யா ரஸுலெல்லாஹ்! அல்லாஹ் சொன்னதை நான் கேட்டிருக்கிறேன். அதாவது, அவர்கள் தமது ஆன்மாவுக்கு தீங்கிழைத்துக் கொண்டவர்களாக அல்லாஹ்விடம் மன்னிப்பு கோரிய நிலையில் (ரஸுலாகிய) உம்மிடம் வந்தார்களாயின் அவர்களுக்காக நீரும் பாவமன்னிப்பு (சிபாரிசு) கோருவீராயின் அவர்கள் அல்லாஹ்வை மன்னிப்பவனாகவும் கிருபையுடையோனாகவும் பெற்றுக் கொள்வார்கள் எனக் கூறியிருப்பதால் நான் தங்களிடம் எனது பாவம் மன்னிக்கப்படுவதற்காக தங்களின் ஷபாஅத்தை நாடி வந்திருக்கிறேன் என்று சொன்னவர் ஒரு கவிதையையும் பாடினார். அக்கவிதையானது.,,,

ياخير من دفنت بالقاع اعظمه فطاب من طيبهن القاع والاكم
نفسى الفداء لقبر انت ساكنه فيه العفاف وفيه الجود والكرم.

ஏ! நன்மைக்குரிய தாத்தே! இங்குதான் அவருடைய புனித உடல் அடக்கப்பட்டுள்ளது. அதனுடைய நறுமணத்தால் இந்தப் பிரதேசமே கமழ்ந்து கொண்டிருக்கிறது. எதில் தாங்கள் இருக்கிறீர்களோ அந்த கப்ருக்கு என்னுயிர் அர்ப்பணம். அதில் பரிசுத்தமான மன்னிக்கிறவர் இருக்கிறார்.

என்று பாடியவர் அதன்பின் அங்கிருந்து சென்று விட்டார். உத்பா சொல்கிறார். அப்போது எனக்கு உறக்கம் வந்து விட்டது. அதுபோது கனவில் காத்தமுன் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கண்டேன். அவர்கள் என்னை நோக்கி, உத்பாவே! அக்காட்டரபியிடம் போ. அல்லாஹ் அவருடைய பாவத்தை மன்னித்து விட்டதாக அவருக்கு சுபச் செய்தி சொல்லும் என்றனர்''

(நூல்: தப்ஸீர் இப்னு கஸீர், பாகம்-1, பக்கம்-520)

அடுத்து அல்லாமா ஷம்ஸுத்தீன் முஹம்மத் பின் ஜஸ்ரி ஷாபி அவர்கள் ஒருஹதீஸை நமது பார்வைக்கு தருகின்றனர். அதாவது,...

اذاانفلتت دابته فليناد اعينوا يا عباد الله رحمكم الله عومص وان اراد عونا فليقل يا عباد الله اعينونى يا عباد الله اعينونى يا عباد الله اعينونى وقد جرب ذالك.

“ஒருவருடைய சவாரி திடீரென காணமல் போய்விட்டால் அவர், ஓ! அல்லாஹ்வின் அடியார்களே! உதவி செய்யுங்கள். அல்லாஹ் உங்களுக்கு அருள் புரிவான் (என்று கூப்பிடுங்கள் என்கின்றனர்.) இன்னும் உதவி தேவையெனில் ஓ! அல்லாஹ்வின் அடியார்களே! எனக்கு உதவி செய்யுங்கள் (என்று மூன்றுமுறை அழையுங்கள்) இது சோதிக்கப்பட்ட ஒன்றாகும் என்று கூறுகின்றனர்''

(நூல்: முஃஜிமுல் கபீர், இமாம் தப்ரானி)

அடுத்து ஹிஸ்னுல் ஹஸீன் என்னும் நூல் துஆக்களை கொண்டு நிரப்பப்பட்ட ஒரு நூலாகும். இதனை அல்லாமா

ஜுஃஸ்ரீ என்பார் முழுக்க முழுக்க ஸஹீஹான ஹதீஸ்களை கொண்டு தொகுத்திருக்கிறார். அவர் தமது நூலின் 2ம் பக்கத்தில் மேற்கண்ட ஹதீஸை குறித்து, "வ அக்ரஜத்ஹுஃ மினல் அஹாதீஸிஸ் ஸஹீஹா" எனக் கூறுகிறார்.

ஆதலால் எவர்கள் அல்லாஹ்வுடைய அடியார்களிடம் உதவி தேடுவதை ஷிர்க்கென்று சொல்கிறார்களோ அவர்கள் தமது மத்ஹபுப்படி மஆதல்லாஹ் நாயகம் ஸல்லல்லாஹுஃ அலைஹி வஸல்லமவர்கள் ஷிர்க்கை கற்றுக் கொடுத்தார்கள் என்றும், இஸ்லாமிய பெரியோர்கள் அனைவரும் காலங்காலமாக ஷிர்க்கை தான் தமது சமுதாய மக்களுக்கு போதித்தார்கள் என்றும் சொல்லவேண்டி வரும். அல்லாஹ் நம்மை காப்பாற்றுவானாக.

## அர்த்தங்கள் புரட்டப்படுதல்

அடுத்து காபிர்களை குறித்து இறக்கப்பட்ட வசனங்களை முஃமின்கள் மீதும், விக்ரஹங்களை குறித்து இறக்கப்பட்ட வசனங்களை நபிமார் மற்றும் வலிமார்கள் மீதும் புரட்டுதல் முஷ்ரிக்குகள் மற்றும் காரிஜிய்யீன்களின் வழக்கமாகும். மேலும் குர்ஆனை குறித்து இறைவன் திருமறையில் கூறும் போது.,,,

يضل به كثيرا ويهدى به كثيرا.

"(அந்த குர்ஆனை கொண்டு) பெரும்பான்மையோரை வழிகெடுக்கிறான். இவ்வாறே பெரும்பான்மையோரை நல்வழிப் படுத்துகிறான்" என்பதாகக் கூறுகிறான்.

இதில் நபித்தோழர் பெருமக்கள் குர்ஆனுக்குரிய விளக்கத்தை வள்ளல் நபி ஸல்லல்லாஹுஃ அலைஹி வஸல்லமவர்களிடம் கற்றதால் அவர்கள் ஈடேற்றமடைந்தனர். அதேநேரம் முஷ்ரிக்குகளும் முனாபிக்குகளும் காரிஜிய்யீன்களும் குர்ஆனை விளங்கிக்கொள்ள தங்களின் அறிவை தமக்கு இமாமாக ஆக்கியதாலேயே வழிகெட்டுப் போயினர். இப்போது இவர்கள் குர்ஆனை எப்படியெல்லாம் தங்களுக்குத் தோதாக

மாற்றி புரட்டுகின்றனர் என்பதை பாருங்கள்,...

انكم وما تعبدون من دون الله حصب جهنم.

**“திடனுகை நீங்களும் இன்னும் அல்லாஹ்வையன்றி உள்ள நீங்கள் வணங்கிக் கொண்டுள்ளவைகளும் நரகின் எரி விறகுகளே”** (சூரா-அன்பியா, வசனம்-98)

இந்த வசனத்தை குறித்து அல்லாமா ஷவ்கானி அவர்கள் கூறும்போது,...

**“இவ்வசனம் இறங்கியபோது மக்காவை சேர்ந்த முஷ்ரிக்கீன்களிலுள்ள இப்னு ஐப்அரா என்பான் நபியவர்களை பார்த்து, அல்லாஹ்வையன்றி உள்ளவைகளில் மலக்குகளும் ஈஸா நபியவர்களும் உஸைர் நபியவர்களும் அன்னைமர்யமும் வணங்கப்படுவதால் அவர்களும் தான் நரகத்திற்கு செல்வார்களென்று சொன்னபோது கீழ்கண்ட வசனம் இறங்கிற்று”** (தப்ஸீர் பத்ஹுல் கதீர், பா-3, ப-429)

ان الذين سبقت لهم منا الحسنى اولئك عنها مبعدون.

**“திடனுகை எவரை குறித்து நமது வாக்குறுதி கொடுக்கப் பட்டு விட்டதோ அவர்கள் நரகைவிட்டும் தூரமாக்கப் பட்டுள்ளனர்”** (சூரா-அன்பியா, வசனம்-101)

கொஞ்சம் கவனியுங்கள். மேற்கண்ட வசனத்தில் “வமா தஃபுதூன” என்று வந்துள்ளதை கூட இவர்களால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆம். மா என்னும் பதம் அறிவற்ற ஜடப்பொருட்களை குறிப்பதற்காக பயன்படுத்தப்படுகிற ஒரு பதமாகும். நபிமார்களும் மலக்குகளும் ஜடப் பொருட்க ளல்லவே! இந்நிலையில் இவ்வசனம் அவர்களை குறிக்கின்ற தென எப்படிச் சொல்ல முடியும்?

மேலும் இமாம் புகாரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுவதை பாருங்கள்,...

وكان ابن عمر يراهم شرار الخلق الله وقال انهم انطلقوا الى آيات

نزلت فى الكفار فجعلوها على المؤمنين.

"ஹழ்ரத் அப்துல்லாஹ் இப்னு உமர் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்கள், காரிஜிய்யீன்களை இறைவனுடைய படைப்புக்களிலேயே மிக மோசமான ஆகக் கெட்டவர்களென்று கூறுபவர்களாயிருந்தனர். ஏனெனில் அவர்கள் காபிர்களை குறித்து இறக்கப்பட்ட வசனங்களையெல்லாம் முஃமின்களின் பக்கமாக புரட்டக் கூடியவர்களாயிருந்தனர் என்று கூறுகின்றனர்"

இப்பிரச்னையில் இஹ்ஸான் இலாஹி ஜஹீரும் காபிர்களை குறித்து இறக்கப்பட்ட வசனங்களை முஸ்லிம்களின் மீதும், விக்ரஹங்களை குறித்து இறக்கப்பட்ட வசனங்களை நபிமார்கள் மீதும் வலிமார்கள் மீதும் மாற்றிப் புரட்டுவதன் மூலம் இறைவனது நல்லடியார்கள் உதவி செய்ய மாட்டார்களென்றும் அவர்களிடம் உதவி தேடக்கூடாதென்றும் கூறுகிறார். இதனை ஜஹீர் ஸாஹிப் அவர்கள் முஷ்ரிக்குகளிடமிருந்து கற்றுக் கொண்டாரா? அல்லது காரிஜிய்யீன்களிடமிருந்து கற்றுக் கொண்டாரா? என்பதை அவர்தான் தெளிவுபடுத்த வேண்டும். இன்னும் அவரால் புரட்டப்படுகிற ஒரு வசனத்தை பாருங்கள்,...

قل ادعوا الذين زعمتم من دون الله لا يملكون مثقال ذرة فى السموات ولا فى الارض.

"(நபியே!) கூறும். நீங்கள் அல்லாஹ்வையன்றி எவைகளை எண்ணிக் கொண்டிருக்கிறீர்களோ அவைகளை அழையுங்கள். அவைகள் வானம் பூமியிலுள்ள ஒரு அணுவுக்குக்கூட அதிகாரியாகாது" (சூரா-ஸபா, வசனம்-22)

இந்த வசனத்திற்கு அல்லாமா ஷவ்கானி தமது தப்ஸீரில்,...

هذا امر النبى صلى الله عليه وسلم بان يقول لكفار قريش او للكفار على الاطلاق.

"இந்த வசனத்தில் இறைவன் நபியவர்களை நோக்கி, நீங்கள் குறைஷிக் காபிர்களை அல்லது எல்லா காபிர்களையும்

நோக்கி சொல்லுங்கள் என்பதாக கூறுகிருன் என்று விளக்க மளிக்கிருர்''

அடுத்து ஜஹீர் ஸாஹிபால் புரட்டப்படும் இன்னெரு வசனத்தை பாருங்கள்,...

ذالكم الله ربكم له الملك والذين تدعون من دونه ما يملكون من قطمير.

''அவன்தான் உங்கள் இறைவனுகிய அல்லாஹ். சகல ஆட்சிகளும் அவனுக்குரியதே! அவனையன்றி எவைகளை நீங்கள் அழைக்கிறீர்களோ அவைகளுக்கு ஒரு அணுவளவும் அதிகாரமில்லை'' (சூரா-ஃபாதிர், வசனம்-13)

இந்த வசனத்திற்கும் அல்லாமா ஷவ்கானி அவர்கள் விளக்கமளிக்கும் போது,...

لا يسمعوا دعاءكم لكونها جمادات لا تدرك شيئا من المدركات (الى ان قال) ويجوز ان يرجع (والذين تدعون من دونه) وما بعده الى من يعقل ممن عبدهم الكفار وهم الملئكة والجن والشياطين.

''லா யஸ்மவூ துஆஅகும் - அவைகள் உங்களின் அழைப்பை செவியேற்காது எனக் கூறப்பட்டதற்குரிய காரணமானது, அவைகள் கற்களாகுமாதலால் அவைகளால் எதையும் உணர முடியாது. இவ்வாறே தத்ஊன - என்பதன் கருத்தானது, காபிர்களால் வணங்கப்பட்டு வந்த அறிவுள்ள பொருட்களாகிய மலக்குகளும் ஜின்களும் ஷைத்தான்களுமாகும்'' என்று கூறுகிருர்.

சிந்தித்துப் பாருங்கள். அல்லாமா காழி ஷவ்கானி அவர்கள், மேற்கண்ட வசனத்தில் குறித்துக் காட்டப்படுகிற வணங்கப்படும் பொருட்கள் என்பவை விக்ரஹங்களும் ஷைத்தான்களும் என்று கூறுகிருர். ஆனல் ஜஹீர் ஸாஹிப் இந்த வசனத்தில் வணங்கப்படுபவை நபிமார்களும் வலிமார்களும் தானென்று திருக்குர்ஆனுக்குரிய வசனத்தின் கருத்தையே புரட்டுகிருர்.

அடுத்து இதே வசனத்தில் அல்லாஹ், ''வ யவ்மல் கியாமத்தி யக்ஃபுருன பிஷிர்க்கிகும் - அப்பொய் தெய்வங்கள் அவர்கள் ஷிர்க் (இணை) வைத்ததை மறுத்து விடுவார்கள்'' என்றும் கூறுகிறான். ஆனால் அதேநேரம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் மறுமையில் மஹ்ஷர் வாசிகளை நோக்கி, உங்களுக்காக ஷஃபாஅத்துச் செய்ய நான் இருக்கிறேன் என கூறுவார்கள் என்பதாக முஸ்லிம், பாகம்-1, பக்கம்-110ல் கூறுவதால் நபியவர்கள் இவ்வாறு சொல்வது முழுக்க முழுக்க தவறாகும். ஏனெனில் இவ்வசனத்தில் ஜஹீர் ஸாஹிபின் கூற்றுப்படி நபிமார்களும் வலிமார்களும் உட்படுத்தப்படுவதால் உங்களுக்கு ஷஃபாஅத்துச் செய்வதற்காக நான் இருக்கிறேனென நபியவர்கள் சொல்லக்கூடாது. இப்படியொரு கருத்து இந்த வசனத்திற்கு கொள்ளப்பட்டால் இதோர் மிகப்பெரும் தவறான நடைமுறைக்கு முன்னுதாரணமாகி விடும். எனவே மேற்கண்ட வசனம் அல்லாஹ்வுக்கு இணை வைக்கப்படும் விக்ரஹங்களை குறித்தும் ஜின் ஷைத்தான்களை குறித்தும்தான் பேசுகிறதென்பதை நாம் தெளிவாக விளங்கிக் கொள்ள வேண்டும். பின்னும் எந்தவொரு முஸ்லிமும் நபிமார்களையும் வலிமார்களையும் அல்லாஹ்வுக்கு ஒருபோதும் சமமானவர்களாக எண்ணியதுமில்லை. நம்பியதுமில்லை. இது போலவே மற்ற வசனங்களும் விக்ரஹங்களை குறித்தும் ஜின் ஷைத்தான்களை குறித்தும் தான் பேசுகிறதேயன்றி அவைகளை நபிமார்கள் மீதும் வலிமார்கள் மீதும் உதவிதேடும் விஷயத்தில் புரட்டுவது இவர்கள் எத்தனை விபரீதமான போக்குடையவர்கள் என்பதை நமக்கு புலப்படுத்துகிறது. அடுத்து இன்னொரு வசனத்தை பாருங்கள்,...

افرأيتم ما تدعون من دون الله ان ارادنى الله بضر هل هن كاشفات ضره او ارادنى برحمة هل هن ممسكات رحمته.

**''(நபியே!) நீர்கூறும். அல்லாஹ் எனக்கு யாதொரு தீங்கும் இழைக்க நாடினால் (நீங்கள் அழைக்கும் அல்லாஹ் வல்லாத) அவைகள் அத்தீங்கை நீக்கிவிட முடியுமா என்பதை**

**நீங்கள் கவனித்தீர்களா? அல்லது அவன் எனக்கு ஏதும் அருள் புரிய நாடினுல் அவனது அருளை அவைகள் தடுத்து விடுமா என்ன?''** (சூரா-ஸுமர், வசனம்-38)

மேற்கண்ட வசனத்தில் அல்லாஹ் ஒருவருக்கு அருள் புரியவோ அல்லது தீங்கிழைக்கவோ நாடினுல் அதை எந்தப் படைப்பும் தடுத்துவிட முடியாதென்று கூறுகிருன். இந் நிலையில் இந்த வசனத்தை நபிமார்கள் மீதும் வலிமார்கள் மீதும் எப்படி சம்பந்தப்படுத்த முடியும்? ஏனெனில் கொஞ்சமும் அறிவில்லாத ஒரு முஸ்லிம்கூட இறைவனுடைய நல்லடி யார்கள் அல்லாஹ்வுக்கு போட்டியாளர்களாகவோ அல்லது சமமானவர்களாகவோ இருக்கிருர்களென்றே அல்லது அல்லாஹ் ஒருவருக்கு அருள்புரியவோ தீங்கிழைக்கவோ நாடும்போது அதை அவர்கள் தடுத்து விடுவார்களென்றே சொல்வதில்லை. இவ்விஷயத்தில் நம்முடைய நம்பிக்கையானது அவர்கள் அல்லாஹ்வுடைய நேசத்திற்குரிய மிகப்பெரும் அந்தஸ்த்தில் இருப்பதால் அவர்களின் கோரிக்கையையும் பிரார்த்தனை யையும் அவன் மறுக்காமல் ஏற்றுக் கொள்கிருன் என்பதே.

அடுத்து இன்னெரு வசனத்தையும் பாருங்கள்,...

ان يدعون من دونه الا اناثا وان يدعون الا شيطانا مريدا.

**“அல்லாஹ்வையன்றி அவர்கள் அழைப்பவைகள் பெண் (பெயருடையவை) களேயன்றி வேறில்லை. துஷ்ட ஷைத்தானை யன்றி (மற்றெதையும்) அவர்கள் அழைக்கவில்லை''**

இவர்களுடைய ஈமானில் கொஞ்சங்கூட ரோஷம் என்பதே இல்லையா என்ன? அல்லது அது செத்துப் போய் விட்டதா? இல்லையெனில் இப்படிப்பட்ட வசனங்களை நபிமார்களின் மீதும் வலிமார்களின் மீதும் இட்டுக் கட்டுகிருர்களே! “ஷைத் தானன் மரீத்'' என்னும் வாக்கியத்தை நபிமார்கள் மீதும் வலி மார்கள் மீதும் புரட்டுவதற்கு முன் அல்லாஹ்வின் கோபத்தை குறித்தும் அழிவை குறித்தும் இவர்கள் கொஞ்சமாவது அச்சப் பட வேண்டாமா? அல்லது மறுமை என்ற ஒன்று வரவே

வராதென்று இவர்கள் முடிவு செய்து விட்டார்களா?

மேலும் இஸ்த்திஆனத்தை மறுப்போர் "இய்யாக நஃபுது வ இய்யாக நஸ்த்தஈன்" என்னும் வசனத்தையும் தங்களின் கூற்றுக்குரிய மிகப்பெரும் ஆதாரமாக எடுத்துக் காட்டுகின்றனர். இனி இந்த வசனத்தை பொதுவானதோர் நிலைக்கு உட்படுத்தப்பட்டால் அந்நிலையில் அல்லாஹ்வையன்றி வேறு யாரிடமும் உதவி தேட முடியாது. அது உயிரோடிருப்பவராக இருந்தாலும் சரி. இறந்து போனவராக இருந்தாலும் சரி. சமீபத்திலிருப்பவரோ, தூரத்திலிருப்பவரோ, மருத்துவரோ, போலீஸோ, ஸவூதியோ, அமெரிக்காவோ யாராக இருந்தாலும் சரி. யாரிடம் உதவி கேட்டாலும் அது ஷிர்க்காகி விடும்.

இதுபற்றி நவாப் வஹீதுஸ்ஸமான் அவர்கள் கூறுவதை பாருங்கள்,...

قال الشوكانى من اصحابنا لا خلاف في جواز الاستعانة بالمخلوق فى ما يقدر عليه الا الله فلا يستعان ولا يستغاث فيه الا به وهو المراد فى قوله اياك نستعين وبهذا ظهر ان من اصحابنا من زعم ان مطلق الاستعانة والاستغاثة بغير الله شرك فقد غلا وتجاوز الحد نعوذ بالله من الغلو والافراط.

"நமது தோழர்களில் ஷவ்கானி சொன்னார். எந்தப் பொருள் ஒரு படைப்பின் சக்திக்கு உட்பட்டதாக இருக்கின்றதோ அதை அந்தப் படைப்பிடம் கேட்கலாம் என்பதில் யாருக்கும் எந்த கருத்து வேறுபாடும் கிடையாது. இவ்வாறே எந்தப் பொருளில் அல்லாஹ்வை தவிர வேறு யாருக்கும் அதிகாரமில்லையோ அதை அல்லாஹ்விடம் மட்டும்தான் கேட்க வேண்டும். இந்நிலையில் திருக்குர்ஆனின் "இய்யாக நஸ்த்தஈன்" எனும் வசனத்துடைய கருத்தும் இதுதான். இவ்விளக்கத்தை கொண்டு நமது தோழர்களில் எவரேனும் பொதுவாக அல்லாஹ் அல்லாத யாராக இருந்தாலும் அவரிடம் உதவி தேடுவதை ஷிர்க்கென்று சொல்வாரேயாயின் அவர் அறிவுக்கு பொருத்தமில்லாத ஒன்றை சொன்னதோடு வரம்பும்

கடந்து விட்டாரென்று தான் சொல்வோம்''

(நூல்: ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-19)

மேற்கண்ட ஷவ்கானியின் விளக்கத்தை பார்த்த பின்னரும் ''இய்யாக நஃபுது வ இய்யாக நஸ்த்தஈன்'' என்னும் வசனம் பொதுநிலையை குறிக்காது ஒரு குறிப்பான நிலையைத்தான் குறிக்குமென்று மீண்டும் எவராவது வாதிப்பாரேயாயின் அவர் ஸிராஜுல் ஹிந்த் அல்லாமா அப்துல் அஸீஸ் முஹத்திஸ் தெஹ்லவி அவர்களின் கருத்தாகிய, ஒரு படைப்பை சுயமான ஒன்றெென நம்பி அதனிடம் உதவி தேடுவது ஹராமாகும். அவ்வாறின்றி ஒரு படைப்பை இறைவனுடைய உதவி வெளிப்படும் ஒரு துறையென நம்பி உதவி தேடப்பட்டால் அது கூடுமென்பது மட்டுமல்ல. மாறுக அது எதார்த்தத்தில் அல்லாஹ்விடம் தேடப்பட்ட உதவியேயாகும் என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும் என்னும் கூற்றை எடுத்துப் பார்க் கட்டும். இப்போது சொல்லுங்கள். இந்த வசனம் நபிமார் வலி மார் போன்ரேரிடம் உதவி தேடுவதை எங்கே மறுக்கிறது?

இனி முப்ததியீன்களான இந்த வஹாபிகளால் எழுப்பப் படும் இன்னெரு ஆட்சேபணையையும் பாருங்கள்,...

''முஷ்ரிக்குகள் கூட கடல் பயணத்தின் போது அல்லாஹ்வை அழைத்துத்தான் உதவி தேடினர். ஆனல் இந்த அஹ்லுஸ் ஸுன்னத் வல் ஜமாஅத்தை சார்ந்தவர்கள் தமது ஒவ்வொரு பயணத்திலும் அது கடல் பயணமாயினும் தரை பயணமா யினும் அல்லாஹ் அல்லாதவர்களை அழைத்துத்தான் உதவி தேடுகின்றனர்'' (நூல்: அல் பரேலவிய்யா, பக்கம்-84)

மேற்கண்ட அல்லாமா அப்துல் அஸீஸ் முஹத்திஸ் தெஹ்லவியின் விளக்கத்தை மீண்டும் ஒருமுறை எடுத்துப் பாருங்கள். நபிமார்களையும் வலிமார்களையும் இறைவனு டைய உதவி வெளிப்படும் ஒரு துறையென நம்பி உதவி தேடப்பட்டால் அவ்வுதவி எதார்த்தத்தில் அல்லாஹ்விடம் தேடப்பட்ட உதவி தானெனில் சுன்னத் வல் ஜமாஅத்தினர்

கடலிலும் கரையிலும் கூட அல்லாஹ்விடம் தான் உதவி தேடுகின்றனர் என்பது தெளிவாகிறது. அதாவது அந்த நல்லோரின் வஸீலாவை கொண்டு உதவி தேடுகின்றனர் என்பதாம். ஆனால் முஷ்ரிக்குகள் அந்த நல்லோர்களை அல்லாஹ்வுக்கு அன்னியமானவர்களென கருதியதால் வேறு வழியின்றி அவர்கள் அல்லாஹ்விடம் உதவி தேடினர். இந்நிலையில் சுன்னத் வல் ஜமாஅத்தினரின் நம்பிக்கை எந்த இடத்திலும் எந்த நிலையிலும் அல்லாஹ்வின் மீதுதான் உள்ளது. கைருல்லாஹ்வாகிய அல்லாஹ்வுக்கு அன்னியமானவர்கள் மீதல்ல. இறுதியாக நவாப் வஹீதுஸ்ஸமான் அவர்கள் தாமே ஒரு கேள்வியை உருவாக்கி அதற்கு அவரே பதிலும் தருவதை பாருங்கள்,...

கேள்வி? : விக்ரஹங்களிடமோ அல்லது சிலைகளிடமோ பொதுவாக எந்த நிலையிலும் உதவி தேடுவது ஷிர்க்காகும். அது உயிரோடுள்ளவர்களிடம் கேட்கப்படுகிற பொருளாக இருந்தாலும் சரியே. அவ்வாறின் நபிமார் வலிமார்களின் ஆன்மாக்களிடம் மட்டும் அவர்கள் உயிரோடிருக்கும் போது கேட்கப்பட்டவைகளை கேட்கலாமென்று எப்படி சொல்கிறீர்?

பதில்: சிலை மற்றும் விக்ரஹங்களுக்குரிய சட்டம் என்பது வேறு. அத்துடன் அவற்றை விட்டு ஒதுங்க வேண்டுமென்றும் அவைகளை உடைத்தெறிய வேண்டுமென்றும் கட்டளையும் இடப்பட்டுள்ளது. நபிமார் வலிமார் சம்பந்தப்பட்ட விஷயம் அப்படியல்ல. அவர்கள் உயிரோடுள்ள போது அவர்களிடம் கேட்கப்பட்ட பொருளை அவர்களது மறைவுக்குப் பின்னால் அவர்களிடம் கேட்பது அவர்களை கண்ணியப்படுத்துவதாகும். நாம் இதற்குமுன் இஸ்லாமிய மார்க்கத்தில் நபிமார் வலிமார் போன்றோரது நினைவுச் சின்னங்களை கண்ணியப்படுத்துவது இஸ்லாத்தை கண்ணியப்படுத்துவதாகும் என்று கூறியுள்ளோம். அதேநேரம் முஷ்ரிக்குகள் எதை வணங்குகிறார்களோ அவைகளை சாதாரணமாக கண்ணியப்படுத்துதல் கூட குப்ராகும். இவ்வாறே நபிமார் வலிமார் போன்றோரின் ஆன்மாக்கள்

சிலைகளுடைய இனத்தை சேர்ந்ததல்ல. மாறுக அவைகள் மலக்குகளின் இனத்தை சேர்ந்ததாகும். அல்லது அதை விடவும் உயர்ந்த நிலையினை கொண்டதாகும். ஆதலால் அவர்களின் ஆன்மாக்களை மலக்குகளோடு அனுமானிக்கப் படுமேயன்றி விக்ரஹங்களுடனோ சிலைகளுடனோ ஒப்பு நோக்கப்பட மாட்டாது. காரணம் சிலைகள் என்பது முழுக்க முழுக்க அசுத்தமானவைகளாகும்.

(நூல்: ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-27)

## "வஸீலா!"

இப்பதம் அரபிமொழி அகராதியில் ஏதாவதொரு பொருளை தனது நாட்டத்தை நிறைவேற்றிக் கொள்வதற்காக தனக்கும் இன்னொரு பொருளுக்குமிடையே ஒன்றை இடையிலாக்கிக் கொள்வதற்கு "வஸீலா" என்று சொல்லப்படும். இனி ஷரீஅத்தில் நல்ல அமலையும் நல்லடியார்களையும் அல்லாஹ்வுக்கும் அடியானுக்கும் இடையிலாக்கிக் கொள்வதுதான் வஸீலா வாகும். இந்த வகையில்தான் நல்லமலும் நல்லடியார்களும் வஸீலாவாக இருக்கின்றனர்.

குத்பே மதீனா ஹழ்ரத் மௌலானா ஜியாவுத்தீன் அஹ்மத் மதனீ (இமாம் அஹ்மத் ரஜா அவர்களின் கலீபா) அவர்க ளிடம் ஒருவர் வந்து, வஸீலா ஆகுமான ஒன்றென்பதற்குரிய ஆதாரமென்ன? என்றுகேட்க, அதற்கவர்கள்,...

يايها الذين آمنوا اتقوا الله وابتغوا اليه الوسيلة.

**"விசுவாசிகளே! அல்லாஹ்வை அஞ்சுங்கள். இன்னும் அவனளவில் வஸீலாவையும் தேடுங்கள்"**

என்னும் திருக்குர்ஆனுக்குரிய வசனத்தை ஓதிக் காட்டினர். அதற்கவர்; இந்த ஆயத்தில் வஸீலா என்பது நல்ல அமல் தானென்று சொல்ல, ஹழ்ரத் அவர்கள்; அவரை நோக்கி, நம்முடைய அமல் அங்கீகரிக்கப்பட்டதா அல்லது தள்ளப் பட்டதா? அதற்கென்ன ஆதாரம்? என்றுகேட்க, அதற்கவர்; அது எனக்கெப்படி தெரியும்? என்றுசொல்ல, மீண்டும்

ஹழ்ரத் அவர்கள்; அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்பட்டவர்களா இல்லையா? என்றுகேட்க, அதற்கவர்; நிச்சயமாக அங்கீகரிக்கப் பட்டவர்கள் தான் அதிலென்ன சந்தேகம்? என்றுசொல்ல, அதுகேட்ட ஹழ்ரத்தவர்கள்; அப்படியானல் நல்லமலை வஸீலாவாக்க முடியும். அதுவும் ஏற்றுக் கொள்ளப்பட்டதற் குரிய ஆதாரமில்லாத நிலையில்என்னும் போது அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்பட்டவர்களென்னும் ஆதாரமுள்ள நிலையி லுள்ள நபியவர்கள் ஏன் வஸீலாக முடியாது என்று கேட்டனர்.

## இறைவனிடம் நல்லமலையும் நல்லோரையும் வஸீலாவாக்குதல்

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவின்றனர்.

انزل الله على ما امانين وما كان الله ليعذبهم وانت فيهم وما كان الله معذبهم وهم مستغفرون.

“அல்லாஹ் இருவகையான பாதுகாப்பை எனக்கு இறக்கித் தந்திருக்கிறுன். அதிலொன்று, “எதுவரை நீங்கள் அவர்கள் மத்தியில் இருப்பீர்களோ அதுவரை அவர்களை அல்லாஹ் வேதனை செய்ய மாட்டான் என்பதும் இன்னென்று, எதுவரை அவர்கள் பாவமன்னிப்பு தேடிக் கொண்டிருப்பார்களோ அதுவரை அவர்களை அல்லாஹ் வேதனை செய்ய மாட்டான் என்பதுமாகும்”

(நூல்: திர்மிதி, பக்கம்-439.)

முந்திய வசனத்தில் வேதனை செய்யப்படுவதிலிருந்து பாதுகாக்கப்படுவதற்குரிய வஸீலாவாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களையும், இரண்டாவது வசனத்தில் பாவமன்னிப்புக்குரிய நல்லமலையும் குறிப்பிடப் படுவதை பார்க்கிறேம்.

رب اشعث مدفوع بالابواب لو اقسم على الله لا بره.

அடுத்து ஹழ்ரத் அபூஹுரைரு ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்கள் நவின்றதாக அறிவிக்கின்றனர். "தலைவிரிகோலமாக உள்ள பெரும்பான்மையோர் வாசல்படியிலிருந்து திருப்பி அனுப்பப்படுகின்றனர். அவர்கள் அல்லாஹ்விடம் சத்தியம் செய்து கேட்பார்களாயின் அல்லாஹ் அவர்களின் கோரிக் கையை நிறைவேற்றித் தருகிறுன்"

(நூல்: மிஷ்காத், பக்கம்-446.)

هل تنصرون وترزقون الا بضعفائكم.

இவ்வாறே ஹழ்ரத் மிஸ்அப் பின் ஸஃத் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் நவின்றதாக அறிவிக்கின்றனர். "உங்களுக்கு உதவியும் இரணமும் உங்களிலுள்ள பலவீனர்களின் காரண மாகக் கிடைக்கின்றது" நூல்: மிஷ்காத், பக்கம்-446.

الابدال يكونون بالشام وهم اربعون رجلا كلما مات رجل ابدل الله مكانه رجلا يسقى بهم الغيث وينتصر بهم على الاعداء ويصرف عن اهل الشام بهم العذاب.

ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர். நான் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் சொல்லக் கேட்டேன். "அப்தால்கள் என்போர் ஷாம் தேசத்தில் இருப்பர். அவர்கள் மொத்தம் நாற்பது நபர்களாகும். இனி அவர்களில் ஒருவர் மறைந்து விட்டால் வேறொருவர் அந்த இடத்தில் அமர்த்தப்படுகிறுர். அவர்கள் பொருட்டே மழை பொழிகின்றது. இன்னும் அவர்கள் பொருட்டே எதிரிகளிட மிருந்து வெற்றியும் உதவியும் உங்களுக்குக் கிடைக்கிறது. இன்னும் அவர்கள் பொருட்டாலேயே ஷாம் தேசத்தவர் மீது இறக்கப்படும் வேதனையும் அகற்றப்படுகிறது"

(நூல்: மிஷ்காத், பாகம்-3, பக்கம்-582.)

ابغونى فى ضعفائكم فانما ترزقون او تنصرون بضعفائكم.

ஹழ்ரத் அபூதர்தா ரழியல்லாஹுஅன்ஹு அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை கொண்டு அறிவிக்கின்றனர். "நீங்கள் உங்களில் பலவீனமான வர்களிடம் எனது திருப்தியை தேடுங்கள். அவர்களில் என்னை தேடுங்கள். ஏனெனில் உங்களிலுள்ள பலவீனமானவர் களின் பொருட்டாலேயே உங்களுக்கு இரணமும் வெற்றியும் உதவியும் அளிக்கப்படுகிறது" (நூல்: மிஷ்காத், பக்கம்-447.)

பலவீனமானவர்கள் என்பதில் ஒரு சாரார் வறுமைக்கு ஆளாகி இருப்போர். இன்னொரு சாரார் அதிகமான வணக்க வழிபாடுகளின் காரணமாக ஃபகீர்களாக இருப்பவர்கள். இதில் இரண்டாவது சாராரே (அவ்லியாக்கள்) வஸீலாவாகுவதற்கு முழுக்க முழுக்க தகுதியானவர்களாகும்.

انه كان يستفتح بصعاليك المهاجرين.

அடுத்து உமையயா பின் காலித் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களை கொண்டு அறிவிக்கின்றனர். அதாவது "அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஃபுகராக்கள் மற்றும் முஹாஜிரீன்களின் வஸீலாவை கொண்டு உதவிக்கும் வெற்றிக்குமுரிய துஆ செய்பவர்களாக இருந்தனர்"

(நூல்: மிஷ்காத், பக்கம்-447.)

وقال ابن الملك بان يقول اللهم انصرنا على الاعداء بحق عبادك الفقراء المهاجرين.

ஹழ்ரத் முல்லா அலி காரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றனர். "இப்னுல் மலிக் என்பார் சொல்கிறார். அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தங்களிலுள்ள ஃபகீர் மற்றும் முஹாஜிர்களை முன்னிருத்தி, எங்களுக்கு விரோதிகளுக்கெதிராக உதவி செய்வாயாக எனக் கேட்பவர் களாக இருந்தனர்" (நூல்: மிர்காத், பாகம்-10, பக்கம்-13.)

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள்

அல்லாஹ்வுக்கு மிக மிகப் பிரியமானவர்கள். அவர்கள் எதை கேட்டாலும் அல்லாஹ் நிறைவேற்றித் தருவான் என்னும் போது தங்களிலுள்ள ஃபகீர்களையும் முஹாஜிர்களையும் வஸீலாவாக்க வேண்டிய அவசியமென்ன? எனில் இது அவர்களை கண்ணியப்படுத்துவதற்காகவும் தமது சமுதாயத்தி னரும் இவர்களை வஸீலாவாக்கிக் கொள்ள வேண்டுமென்பதற் காகவும் நபியவர்களால் நடத்திக் காட்டப்பட்ட ஒரு நடை முறையாகும். அவ்வாறுயின் நபித்தோழர்களை வஸீலாவாக்க முடியுமென்னும் போது நபியவர்களை ஏன் வஸீலாவாக்க முடியாது. இதைகொண்டு வெறும் நல்லமலை வஸீலாவாக் குவதை விட நல்லோரை வஸீலாவாக்குவதே ஏற்றமாகும் என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம்.

## நபியவர்களை வஸீலாவாக்குதல்

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களை அவர்கள் பிறக்கு முன்னும், பிறந்த பின்னும், அவர்கள் இவ்வுலகில் இருக்கும் போதும், இவ்வுலகை விட்டு மறைந்த பின்னும், பர்ஸகுடைய உலகிலும், நாளை மறுமையில் மஹ்ஷ ரிலும் வஸீலாவாக்குதல் ஜாயிஸாகும். இவ்விஷயத்தில் இப்னு கையிம் என்பார் கூறுவதை பாருங்கள்,...

لا سبيل الا السعادة والفلاح لا فى الدنيا ولا فى الآخرة الا على ايدى الرسل ولا ينال رضاء الله البتة الا على ايديهم.

**“இவ்வுலகிலும் மறுஉலகிலும் ஈடேற்றத்திற்கும் வெற்றிக்குமுரிய பாதையானது அண்ணல் நபியவர்களின் கையில் தானுள்ளது. பின்னும் குறிப்பாக இறை திருப்தியானது நபியவர்களின் திருக்கரத்தை தவிர வேறெங்குமில்லை”**

(நூல்: மஷாரிகுல் அன்வார், பக்கம்-59.)

## நபியவர்கள் தோன்றுமுன் வஸீலா

لما اقترف آدم الخطيئة قال يا رب اسئلك بحق محمد لما غفرت لى فقال الله يا آدم وكيف عرفت محمدا ولم اخلقه؟ قال يا رب لما

خلقتنى بيدك ونفخت في من روحك رفعت رأسى فرأيت على فوائم العرش مكتوبا لا اله الا الله محمد رسول الله فعلمت انك لم تضف الى اسمك الا احب الخلق اليك فقال الله صدقت يا آدم انه لاحب الخلق الي ادعنى بحقه فقد غفرت لك ولولا محمد ما خلقتك. هذا حديث صحيح الاسناد.

''ஹழ்ரத் உமர் ரழியல்லாஹுௗ அன்ஹுௗ அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹுௗ அலைஹி வஸல்லமவர்களை கொண்டு அறிவிக்கின்றனர். ஆதம் அலைஹிஸ்ஸலாமவர் களில் தவறு நிகழ்ந்தபோது அவர்கள் இறைவனிடம், இறைவா! நான் முஹம்மத் ஸல்லல்லாஹுௗ அலைஹி வஸல்ல மவர்களின் வஸீலாவை கொண்டு உன்னிடம் பிரார்த்திக் கிறேன் எனது தவறை மன்னித்து விடுவாயாக என்றுகேட்க, அதற்கிறைவன்; ஆதமே! நீ முஹம்மதை எவ்வாறு தெரிந்து கொண்டாய்? அவரை நான் இன்னும் படைக்கக்கூட இல்லையே! என்றுசொல்ல, அதற்கவர்கள்; ரட்சகா! நீ என்னை உனது குத்ரத்துடைய கரம் கொண்டு படைத்து எனக்குள் ருஹை ஊதியபோது நான் எனது தலையை உயர்த்தி பார்த் தேன். அப்போது அர்ஷின் வாயிலில் லாஇலாஹ இல்லல் லாஹுௗ முஹம்மதுர் ரஸுலுல்லாஹ் என்று எழுதப்பட்டி ருந்தது. அப்போது உனது பெயரோடு படைப்புக்களிலெல் லாம் உனக்கு மிகவும் பிரியமானவரது பெயரைத்தான் நீ எழுதியிருப்பாய் என்பதை நான் தெரிந்து கொண்டேன் என்று சொல்ல, அதற்கிறைவன்; ஆதமே! நீர் உண்மை சொன்னீர். அவர் எல்லா படைப்புக்களிலும் எனக்கு மிகவும் பிரியமா னவரே. நீர் அவர் பொருட்டால் அவரது வஸீலாவை கொண்டு கேட்டதால் உமது தவறை மன்னித்தேன். அவர் (முஹம்மத்) இல்லையெனில் நான் உம்மை படைத்திருக்கவே மாட்டே னென்று சொன்னன்'' நூல்: அல் முஸ்தத்ரக், பாகம்-2, பக்கம்-615. இன்னும் இந்த ஹதீஸின் ஸனது ஸஹீஹானதாகும்.

அடுத்து இப்னு கையிம் என்பார் எழுதுகிறார்,...

عن ابن عباس رضى الله عنهما كانت يهود خيبر تقاتل غطفان فلما التقوا هزمت يهود خيبر فعاذت اليهود بهذا الدعاء فقالت ، اللهم انا نسئلك بحق محمد النبى الامي الذى وعدتنا ان تخرجه لنا في آخر الزمان الا نصرتنا عليهم قال فكانوا اذا التقوا دعوا بهذا الدعاء فهزموا غطفان فلما بعث النبى صلى الله عليه وسلم كفروا به فانزل الله وكانوا من قبل يستفتحون على الذين كفروا يعنى بك يا محمد.

"ஹழ்ரத் இப்னு அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்களை கொண்டு அறிவிக்கப்படுவதாவது, கைபர் பகுதியை சேர்ந்த யூதர்கள் ஃகத்பான் என்னும் கோத்திரத்தாருடன் யுத்தம் செய்து கொண்டிருந்தனர். அப்போது ஒருமுறை நடந்த போரில் யூதர்கள் தோற்றுப் போனபோது அவர்கள் இறைவனிடம், இறைவா! நாங்கள் உம்மி நபி முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் வஸீலாவை கொண்டு உன்னிடம் கேட்கிறோம். நீ யாரை இறுதிகாலத்தில் எங்களுக்கு மத்தியில் அனுப்புவதாக வாக்களித்துள்ளாயோ அவர் பொருட்டால் கேட்கிறோம். எங்களுக்கு ஃகத்பான் கோத்திரத்தாருக்கு எதிராக உதவி செய்வாயாக என்று கேட்க, அடுத்து நடைபெற்ற போரில் யூதர்கள் அவர்களை வெற்றி கொண்டனர். இனி இறுதி நபியவர்கள் வருகை தந்தபோது யூதர்கள் நபியவர்களை ஏற்றுக்கொள்ள மறுத்து விட்டனர். அதுபோது இறைவன் "வ கானூ மின் கப்லு யஸ்தஃப்திஹூனெ அலல்லதீன கஃபரு" - இதற்கு முன்னரெல்லாம் அவர்கள் நிராகரிப்போர் மீது தங்களுக்கு வெற்றியை தருமாறு, அதாவது முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் பொருட்டாலே எனக் கேட்பவர்களாக இருந்தனர்" என்று கூறுகிறன். நூல்: ஹிதாயத்துல் ஹயாரா, பக்கம்-493.

## வள்ளல் நபி வாழும்போது வஸீலா

"இமாம் தப்ரானி முஃஜிம் கபீரிலும், முஃஜிம் அவ்ஸத்திலும் ஹழ்ரத் அனஸ் பின் மாலிக் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை கொண்டு அறிவிக்கின்றனர். அதாவது, ஹழ்ரத்

அலி ரழியல்லாஹு அன்ஹுவின் அன்னை ஹழ்ரத் பாத்திமா பின்த் அஸத் ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் இவ்வுலகை விட்டு மறைந்தபோது, அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஹழ்ரத் உஸாமா பின் ஸைத், ஹழ்ரத் அபூ அய்யூப் அன்ஸாரி மற்றும் ஒரு கருப்பு நீக்ரோ அடிமையை கப்ரு வெட்டச் சொன்னார்கள். பின்னர் கப்ரு இடுப்பளவுக்கு தோண்டப்பட்ட போது நபியவர்கள் தாமே கப்ருக்குள் இறங்கி கப்ரை தோண்டியதோடு மண்ணையும் அள்ளினர். கப்ரு தோண்டப்பட்ட பின் நபியவர்கள் அக்கப்ருக்குள் படுத்துக் கொண்டு,...

الله الذى يحيى ويميت وهو حي لا يموت اغفر لامى فاطمة بنت اسدو وسع عليها مدخلها بحق نبيك والانبيآء الذين من قبلى فانك ارحم الراحمين.

அல்லாஹ்வே ஜீவியத்தையும் மரணத்தையும் தருகிறான். அவன் ஜீவியமுள்ளவன். அவனுக்கு மரணமில்லை. இறைவா! எனது அன்னை பாத்திமா பின்த் அஸதை மன்னித்து விடுவாயாக. இன்னும் அவருடைய கப்ரை விசாலமாக்குவாயாக. அவரது நபியின் பொருட்டாலும் அவருக்கு முன்னுள்ள நபிமார்களின் பொருட்டாலும். நிச்சயமாக நீ மிகப்பெரும் கிருபையாளனாகும்" என்று பிரார்த்தித்தனர்.

நூல்: வஃபாவுல் வஃபா, பாகம்-3, பக்கம்-899.

இந்த ஹதீஸில் நபியவர்கள் வாழ்ந்தபோதும் மற்ற நபிமார்கள் மறைந்த பின்னும் இறைவனிடம் வஸீலாவாக ஆக்கப்படுவதை பாருங்கள். அடுத்து அல்லாமா நூருத்தீன் ஸம்ஹூதி ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர்,...

"அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர் களிடம் வஸீலாவானது சிலபோது நேரடியாக ஒரு பொருளை குறித்து கேட்கப்படுகிறது. இதன் கருத்து நபியவர்களின் துஆவும் ஷபாஅத்தும் இறைவனுடைய சன்னிதானத்தில் காரணமாக்கப்படுவதற்குரிய ஆற்றலுக்குரியதாக இருப்பதால்

இது நபியவர்களின் துஆவை கேட்பதாகும். கேட்கப்படும் முறை வேறு மாதிரியாக இருந்தாலும் சரியே. இம்முறையில் தான் ஹழ்ரத் ரபீஆவுடைய துஆவும் அமைந்துள்ளது. அதாவது, நான் தங்களிடம் சுவர்க்கத்தில் தங்களின் தோழமையை கேட்கிறேன் என்பதாம். இதன் கருத்து நபியே தாங்கள் இந்த நாட்டம் நிறைவேறுவதற்குரிய காரணமாகவும் சிபாரிசுக்காரராகவும் ஆக வேண்டுமென்பதாம்''

நூல்: வஃபாவுல் வஃபா, பாகம்-4, பக்கம்-5.

அடுத்து ஹழ்ரத் ஸவாத் பின் காரிப் ரழியல்லாஹு அன்ஹு நபியவர்களிடம் வேண்டுவதை பாருங்கள்,...

وانك ادنى المرسلين وسيلة الى الله ياابن الاكرمين الاطايب

وكن لى شفيعا يوم لا ذو شفاعة بمغن فتيلا عن سواد بن قارب

''சங்கை மிகுந்த பரிசுத்தமானவர்களின் மைந்தரே! தாங்கள் அல்லாஹ்வுடைய சன்னிதானத்தில் எல்லா ரஸூல் மார்களை விட மிகவும் நெருக்கமான வஸீலாவாகும். எந்த நாளில் ஸவாத் பின் காரிபுக்கு ஷபாஅத்துச் செய்பவர் யாரும் இருக்க மாட்டாரோ அந்த நாளில் தாங்கள்தான் எனது ஷபீஆக இருப்பீர்கள்'' நூல்: முக்தஸர் ஸீரத்துர் ரஸூல், பக்கம்-69. ஆசிரியர்-அப்துல்லாஹ் பின் முஹம்மத் பின் அப்துல் வஹாப் நஜ்தி.

அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் தாயிபிலிருந்து திரும்பியபோது ஜுஃரானா என்னுமிடத்திற்கு வந்து சேர்ந்தனர். அப்போது நபியவர்களுடன் ''ஹவாஸின்'' கோத்திரத்தை சேர்ந்த குழந்தைகளும் பெண்களுமாக மொத்தம் ஆறுயிரம் பேர் கைதிகளாக இருந்தனர். இதில் ஒட்டகம் மற்றும் ஆடுகளின் எண்ணிக்கை கணக்கிலடங்காது. அது போது ஹவாஸினுடைய கோத்திரத்தை சேர்ந்தவர்களில் ஒருவர் இஸ்லாத்தை தழுவியவராக நபியவர்களிடம் வருகை தந்து, அல்லாஹ்வின் தூதரே! எங்களின் மீது இரக்கம் காட்டுங்கள் என்றுவேண்ட, அதற்கு நபியவர்கள்; கைதிகள்

அல்லது பொருட்கள் ஆகிய இவ்விரண்டில் ஏதாவதொன்றை தேர்ந்தெடுங்களென்று சொல்ல, அதற்கவர்; எங்களுக்கு கைதிகள் தான் வேண்டுமென்று சொல்ல, அதற்கு நபியவர்கள் என்னுடைய மற்றும் பனூ அப்துல் முத்தலிபுடைய கைதிகள் அனைவரும் உங்களுக்குரியதாகும். மற்றபடி பங்கிடப்பட்டு விட்ட கைதிகளை நீங்கள் பெறுவதற்கு நான் சொல்வதை போல செய்யுங்கள். அதாவது,...

واذا ما انا صليت الظهر بالناس فقوموا انا نستشفع برسول الله صلى الله عليه وسلم الى المسلمين وبالمسلمين الى رسول الله في آبائنا ونسائنا فسأعطيكم عند ذالك واسأل لكم.

"நான் ஜனங்களோடு ழுஹரை தொழுது முடித்ததும் நீர் எழுந்து நின்று, நாங்கள் ரஸுலுல்லாஹி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் கேட்கிறோம். அவர்கள் எங்களுக்காக முஸ்லிம்களிடம் சிபாரிசு செய்ய வேண்டும். இவ்வாறே முஸ்லிம்களும் எங்களுக்காக நபியவர்களிடம் சிபாரிசு செய்ய வேண்டும். எங்களது குழந்தைகள் மற்றும் பெண்களின் விஷயத்தில் என்று சொல்ல வேண்டும். அதுபோது நான் உங்களுக்கு அருள் புரிவேன். அத்துடன் உங்களுக்காக சிபாரிசும் செய்வேன் என்றனர்"

நூல்: அஸ்ஸீரத்துன் நபவிய்யா, பாகம்-2, பக்கம்-306.

அவ்வாறே அவரும் செய்ய, பெரும்பான்மையான நபித் தோழர்கள் நபியவர்களை பார்த்து, இறைத்தூதரே! எங்களிடமுள்ள அனைத்துமே உங்களுடையது தானென்று சொல்ல, அதற்கு நபியவர்கள் ஒவ்வொரு கைதிக்கும் பகரமாக ஆறு ஒட்டகம் வழங்கப்படும் என்றனர். இதன்மூலம் அக்கோத்திரத்தாருக்கு எல்லா கைதிகளுமே திரும்பக் கிடைத்து விட்டனர்.

அப்போது இச்சம்பவத்தை பார்த்துக் கொண்டிருந்த ஹழ்ரத் ஸுஹைர் பின் ஸுருர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், "உம்னுன் அலைனா ரஸுலெல்லாஹி ஃபில் கரமி, ஃபஇன்னகல் மர்வு நர்ஜுஹு வ நன்தழிரு" - யாரஸுலெல்

லாஹ்! எங்களின் மீது கருணை காட்டுங்கள். நீங்கள் எப்படிப் பட்ட மனிதரெனில் உங்களின் பேரருளைத்தான் நாங்கள் நம்பி யிருக்கிறோம் எதிர்பார்க்கவும் செய்கிறோம்'' என்ற கவிதையை பாடினர். நூல்: அர்ரவ்ழுல் உன்ஃப், பாகம்-2, பக்கம்-306.

அடுத்து பனூபக்ர் மற்றும் குஜாஆ கோத்திரத்தாருக்கி டையே இஸ்லாமிய மார்க்கம் தோன்றுவதற்கு முன்பிருந்தே போர் நடந்து கொண்டிருந்தது. ஹுதைபிய்யா உடன்படிக் கையின் போது பனூபக்ர் கோத்திரத்தார் குறைஷியரோடு சேர்ந்து கொண்டனர். இதுபோன்றே குஜாஆவுடைய கோத்தி ரத்தார் நபியவர்களோடு சேர்ந்து கொண்டனர். அப்போது பனூபக்ருடைய கோத்திரத்தார் இத்தருணத்தை பயன்படுத்திக் கொண்டு குறைஷியரோடு சேர்ந்து குஜாஆவுடைய கோத்தி ரத்தார் மீது போர் தொடுத்து விட்டனர். அப்போது அம்ர் பின் ஸாலிம் குஜாயீ என்பார் தம்முடன் நாற்பது நபர்களை அழைத்துக்கொண்டு நபியவர்களிடம் உதவி கேட்பதற்காக மதீனாவை நோக்கி புறப்பட்டார். இதைகுறித்து இமாம் தப்ரானி முஃஜம் ஸகீரில் ஹழ்ரத் உம்முல் முஃமினீன் மைமூனா ரழியல் லாஹு அன்ஹாவை கொண்டு அறிவிக்கின்றனர்,...

انما سمعت رسول الله صلى الله عليه وسلم يقول في متوضئه ليلا ، لبيك لبيك (ثلاثا) نصرت نصرت (ثلاثا) قلت يا رسول الله سمعتك تقول في متوضئك لبيك لبيك ثلاثا نصرت نصرت ثلاثا كانك تكلم انسانا فهل كان معك احد؟ فقال هذا راجزا بنى كعب يستصرخنى ويزعم ان قريشا اعانت عليهم بنى بكر (الى ان قالت) قالت فاقمنا ثلاثا ثم صلى الصبح بالناس فسمعت الراجز ينشده.

''அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் ஒழு செய்யுமிடத்தில் மூன்றுமுறை ''லப்பைக'' - ஹாழிரானேன் என்றும், ''நுஸிர்த'' - உங்களுக்கு உதவி செய்யப்பட்டது என்றும் நான் சொல்லக் கேட்டேன். அப்போது நான் நபிய வர்களை நோக்கி, தாங்கள் மூன்றுமுறை லப்பைக என்றும்

நுஸிர்த என்றும் சொல்லக் கேட்டேன். அதாவது ஒரு மனிதரிடம் உரையாடுவதை போல தாங்கள் பேசிக் கொண்டிருந்தீர்கள். என்ன? ஒழு செய்யுமிடத்தில் தங்களோடு யாராவது இருந்தார்களா? எனக்கேட்க, அதற்கு நபியவர்கள்; பனூ கஃபுடைய கவிதையாளர் ஒருவர் என்னிடம் உதவிதேடி என்னை அழைத்துக் கொண்டிருந்தார். இன்னும் அவர்களுக்கு எதிராக குறைஷிகள் பனூபக்ருடைய கோத்திரத்தாருக்கு ஆதரவாக உதவி செய்கின்றனர் எனப் பாடினுர் என்பதாக கூறினர். மூன்று நாட்களுக்குப் பின் நபியவர்கள் தமது தோழர்களுக்கு மஸ்ஜிதில் பஜ்ருடைய தொழுகையை தொழ வைத்தனர். அப்போது கவிதையாளர் அக்கவிதையை பாடிக் கொண்டிருந்ததை நான் கேட்டேன்''

நூல்: முக்தஸர் ஸீரத்துர் ரஸூல், பக்கம்-333. ஆசிரியர்: அப்துல்லாஹ் பின் முஹம்மத் பின் அப்துல் வஹ்ஹாப் நஜ்தி. (கவிதை பாடிய இவரும் ஒரு நபித்தோழரே. இவர்தான் மூன்று நாட்களாக தொடர்ந்து நபியவர்களிடம் கவிதை மூலமாக உதவி தேடிக் கொண்டிருந்தார். இறுதியில் இவரது வேண்டுதல் ஏற்கப்பட்டது.)

ஹழ்ரத் உஸ்மான் பின் ஹுனைப் ரழியல்லாஹு அன்ஹு அறிவிக்கின்றனர். அந்தகரான ஒரு நபித்தோழர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் தர்பாருக்கு வருகைதந்து நபியவர்களிடம் தனது கண் பார்வைக்காக துஆ செய்யுமாறு வேண்டினர். அதுபோது நபியவர்கள் அவரை நோக்கி, நீர் விரும்பினுல் நான் துஆ செய்கிறேன். அல்லது நீர் விரும்பினுல் பொறுமையை கைக்கொள்ளும். பொறுமை தான் உமக்கு சிறந்தது எனக்கூற, அதற்கவர்; துஆ செய்ய வேண்டுமென்று சொன்னுர். அதுகேட்ட நபியவர்கள், நல்லது. ஒழு செய்து இரண்டு ரக்அத்தை தொழும். அதன்பின் இந்த துஆவை கேளும் என்றனர். துஆவானது,...

اللهم انى اسئلك واتوجه اليك بمحمد نبى الرحمة يا محمد انى توجهت بك الى ربى في حاجتى هذه لتقضى اللهم شفعه في.

''யாஅல்லாஹ்! உன்னிடம் நான் கேட்கிறேன். இன்னும் உன் பக்கமாக உனது ரஹ்மத்துக்குரிய நபியாகிய முஹம்மதை கொண்டு கேட்கிறேன். யாமுஹம்மத்! நான் உங்களை கொண்டு எனது நாட்டத்திற்காக என்னுடைய ரட்சகனின் பக்கமாக எனது முகத்தை திருப்புகிறேன். யா அல்லாஹ்! எனது நாட்டத்தை நிறைவேற்றி வைப்பாயாக. எனது விஷயத்தில் நபியவர்களின் ஷபாஅத்தை ஏற்றுக் கொள்வாயாக''

நூல்: அல்முஸ்தத்ரக், பாகம்-1, பக்கம்-519.

இமாம் தப்ரானியின் அறிவிப்பில் காணப்படுவதாவது, நாங்கள் அங்கேதான் அமர்ந்திருந்தோம். அதிக நேரம்கூட கடக்கவில்லை. அவர் (அந்தகர்) வந்தார். அவருக்கு பார்வை வந்து விட்டிருந்தது. அவரை பார்த்தபோது அவர் இதற்குமுன் கண்பார்வையற்றவராக இருந்ததை போன்றே தெரியவில்லை.

''ஒருமுறை மதீனவாசிகள் பஞ்சத்தால் பீடிக்கப்பட்டனர். அதுபோது அவர்கள் நபியவர்களிடம் வந்து முறையீடு செய்ய, நபியவர்கள் மிம்பரின் மீது ஏறி மழைக்காக துஆ செய்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம் பலமான மழை கொட்டத் துவங்கிற்று. அப்போது மதீனவை சேர்ந்தவர்கள் நபியவர்களிடம் வருகைதந்து, நாங்கள் மூழ்கிப்போய் விடுவோமென்று சொல்லவே, நபியவர்கள் மீண்டும் துஆ செய்தனர். யாஅல்லாஹ்! எங்களின் அக்கம்பக்கம் மழை பெய்யட்டும். எங்களின் மீது வேண்டாமென்று சொல்ல, மேகங்கள் அக்கம்பக்கமாக நகர்ந்து விட்டன. அதாவது பார்வைக்கு அது நிலவைப் போலிருந்தது. அப்போது நபியவர்கள் சொன்னார்கள்.,,,

لو ادرك ابوطالب هذا اليوم لسره فقال له بعض اصحابه يا رسول الله اردت لقوله

وابيض يستسقى الغمام بوجهه ثمال اليتامى عصمة للارامل

ஒருவேளை அபூதாலிப் இன்று இருந்திருப்பாராயின் அவர் சந்தோஷமடைந்திருப்பார் என்றுசொல்ல, அப்போது ஒரு

நபித்தோழர் நபியவர்களை நோக்கி, யாரஸூலெல்லாஹ்! தங்களின் சைக்கினை அக்கவிதையை ஒத்திருக்கிறது. "சிவந்த முகத்தையுடையவர். அவரது முகத்தின் வஸீலாவை கொண்டு தான் மழைக்காக பிரார்த்திக்கப்படுகிறது. அனாதை மற்றும் ஆதரவற்றோரை அரவணைப்பவரே! ஆதரிப்பவரே! என்றார்"

நூல்: அஸ்ஸீரத்துன் நபவிய்யா, பாகம்-1, பக்கம்-179.

ஆ-ர். இப்னு ஹிஷாம்.

## மாநபியின் மறைவுக்குப்பின் வஸீலா

இமாம் கஸ்த்தலானி இப்னு முனீர் என்பாரை கொண்டு அறிவிக்கின்றனர். ஹழ்ரத் அபூபக்ர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஸையிதே ஆலம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மறைந்த செய்தியை கேட்டு அழுதுகொண்டே வந்தவர்கள் நபியவர்களின் முகத்தை மூடியிருந்த துணியை நீக்கி,...

ولو ان موتك كان اختيارا لجدنا لموتك بالنفوس اذكرنا يا محمد عند ربك ولنكن من بالك.

"ஒருவேளை தங்களின் மறைவுடைய விஷயத்தில் எங்களுக்கு மட்டும் அதிகாரமிருக்குமாயின் நாங்கள் எங்களின் உயிரை அர்ப்பணித்திருப்போம். யாமுஹம்மத்! உங்களின் ரப்பிடத்தில் எங்களை நினைவில் கொள்ளுங்கள். மேலும் எங்களை நினைவில் வைக்க வேண்டும்" என்று கூறினர்.

நூல்: மவாஹிபுல் லதுன்னியா, பாகம்-8, பக்கம்-322.

"ஒருவர் தமது தேவை ஒன்றுக்காக ஹழ்ரத் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை சந்திக்க முயற்சி செய்து கொண்டிருந்தார். ஆனால் அது நிறைவேறாமலிருந்து வந்தது. இதற்கிடையே அவர் ஹழ்ரத் உஸ்மான் பின் ஹுனைப் ரழியல்லாஹு அன்ஹுஅவர்களை சந்தித்தபோது இதுபற்றி சொல்ல, அதற்கவர்கள் அவரிடம், ஒழு செய்துவிட்டு மஸ்ஜிதுக்குப் போய் இரண்டு ரக்அத் தொழுது அதன்பின் இந்த துஆவை ஓதும் என்றனர். (அந்தகருக்கு நபியவர்களால்

சொல்லித்தரப்பட்ட துஆதான் அது)

அவர் அதை செய்து முடித்தபோது அவர் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை மட்டும் சந்திக்கவில்லை. மாறுக அவருடைய கோரிக்கையையும் அவர்கள் நிறை வேற்றி வைத்தனர். அத்துடன் அமீருல் முஃமினீன் அவர்கள் அவரைநோக்கி, வேறு என்ன தேவையானாலும் என்னிடம் வாருங்களென்றும் சொல்லியனுப்பினர். அதன்பின் அவர் திரும்பிவந்து உஸ்மான் பின் ஹுனைப் அவர்களை சந்தித்து, உங்களின் சிபாரிசால் எனது காரியம் நிறைவேறியதென்று அவர்களுக்கு நன்றி சொன்னபோது, அதற்கவர்கள்; நான் எந்த சிபாரிசும் செய்யவில்லை. நான் செய்ததெல்லாம் நபியவர்கள் அந்த அந்தகருக்கு கற்பித்ததை உங்களுக்கு சொல்லித் தந்தது மட்டும் தானென்றனர்''

நூல்: அல்முஃஜிமுஸ் ஸகீர், பக்கம்-103.

ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் பொக்கிஷதார் ஹழ்ரத் மாலிக்தார் என்பார் அறிவிக்கின்றனர். அதாவது, உமர் ரழியல்லாஹு அன்ஹுவின் ஆட்சிக் காலத்தில் பஞ்சம் ஏற்பட்டபோது, ஒருவர் (பிலால் பின் ஹாரிஸ் முஸ்னி என்னும் நபித்தோழர்) அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரௌழா ஷரீபுக்கு வருகைதந்து நபியவர்களை நோக்கி.,,,

يا رسول الله استسق لامتك فانهم قد هلكوا.

''யா ரஸூலெல்லாஹ்! உங்களின் உம்மத்துக்காக வேண்டி மழைக்காக துஆ செய்யுங்கள். ஏனெனில் அவர்கள் அழிந்து கொண்டிருக்கின்றனர்'' என்றார்.

قال فاتاه النبى صلى الله عليه وسلم فى المنام وقال ائت عمر فمره ان يستسقى للناس فانهم سيسقون وقل له عليك الكيس الكيس فاتى الرجل عمر فاخبره قال فبكى عمر وقال يا رب ما آلوا الا ما عجزت عنه.

(அதுபோது) ''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம

வர்கள் அவரது கனவில் தோன்றி, அவரை பார்த்து, உமரிடம் சென்று அவரிடம் மழைக்காக துஆ செய்யச் சொல்லும். மழை தரப்படும். இன்னும் அவரிடம் பாதுகாப்புக்குரிய முந்தானையை பற்றிப் பிடித்திருக்கச் சொல்லும் என கூறிச்சென்றனர். அவர் இச்செய்தியை உமரவர்களிடம் வந்து சொன்னபோது, அதை கேட்டு அவர்கள் அழுததோடு, அவர்கள் யாஅல்லாஹ்! நான் என் வாழ்க்கையில் எப்போதும் படுக்கையில் கூட இதனை மறந்திருக்க மாட்டேனென்று கூறினர்''

நூல்: அல் இஸ்தீஆப், பாகம்-2, பக்கம்-464.

ஹிஜ்ரி 18ம் ஆண்டு உமர் ரழியல்லாஹு அன்ஹுவின் ஆட்சிக் காலத்தில் மீண்டும் பஞ்சம் ஏற்பட்டது. அதை "ஆமுர் ரமாதஹ்'' எனக் கூறுகின்றனர். அப்போது பிலால் பின் ஹாரிஸ் முஸ்னி ரழியல்லாஹு அன்ஹுவிடம் பனூ முஸைனு என்னும் அவர்களது கோத்திரத்தார் வருகைதந்து, நாங்கள் செத்துக் கொண்டிருக்கிறோம். ஏதாவதொரு ஆட்டையாவது அறுங்களென்று சொல்ல, அதற்கவர்கள்; ஆடுகளுக்குள் ஒன்றுமில்லை என்றுசொல்ல, அவர்கள் வற்புறுத்தவே, அவர்கள் ஒருஆட்டை அறுத்து அதனுடைய தோலை உறித்துப் பார்க்க, அதற்குள் சிவப்பான எலும்பு மட்டுமே இருப்பதை கண்ட அவர்கள்,...

فناداه يا محمداه فلما امسى فارى فى المنام ان رسول الله صلى الله عليه وسلم يقول له ابشر بالحياة.

"யா முஹம்மதாஹ்! என்று அழைத்தார்கள். பின்னர் இரவான போது அவர்கள் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹிவஸல்லமவர்களை கனவில் காண நபியவர்கள் அவர்களை நோக்கி, உமது வாழ்க்கை உமக்கு சோபனமாகட்டும் என்று கூறினர்'' நூல்: அல்பிதாயா வந்நிஹாயா, பாகம்-7, பக்கம்-91.

யமாமாவுடைய போரில் முஸைலமத்துல் கத்தாபுடன் அறுபதாயிரம் வீரர்கள் இருந்தனர். அப்போது இஸ்லாமியப் படைகளின் எண்ணிக்கை குறைவாக இருந்ததால் போர்

கடுமையாயிருந்தது. அதுசமயம் போரின் நிலைமை மிகவும் மோசமாக இருந்ததால் முஜாஹிதீன்களாகிய முஸ்லிம்களின் படைகள் பின்னடையத் துவங்கிற்று. படை வீரர்களின் தளபதியாக ஹழ்ரத் காலித் பின் வலீத் இருந்தனர். அவர்கள் இந்நிலையை பார்த்து விட்டு,...

نادى بشعار المسلمين وكان شعارهم يومئذ يا محمداه.

**''முஸ்லிம்களது சின்னங்களை கொண்டு அழைத்தார்கள். அன்று முஸ்லிம்களின் சின்னமானது ''யா முஹம்மதாஹ்'' என்பதாக இருந்தது''**

நூல்: அல்பிதாயா வந்நிஹாயா, பாகம்-6, பக்கம்-324.

ஹழ்ரத் அபூ உபைதா பின் ஜர்ராஹ் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹழ்ரத் கஃப் பின் ழம்ரஹ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களோடு ஆயிரம் வீரர்களை ஹலப் என்னுமிடத்தில் போர் செய்வதற்காக அனுப்பி வைத்தனர். அவர்கள் ஹலபுக்கு சமீபமாக வந்து சேர்ந்தபோது, யூகன்ன ஆயிரம் வீரர்களுடன் வந்து போர் தொடுத்து விட்டார். முஸ்லிம்கள் இணைந்து போர் புரிந்து கொண்டிருந்தனர். அப்போது பின்னால் மறைந்திருந்த ஐயாயிரம் படைவீரர்களும் திடீரென்று பின்ன லிருந்து தாக்கத் துவங்கி விட்டனர். முஸ்லிம்கள் என்ன செய்வதென்று அறியாது திகைத்து நின்றபோது, அப்போது கையில் கொடியை பிடித்துக் கொண்டிருந்த கஃப் பின் ழம்ரஹ் அவர்கள் சப்தமாக.,,,

يا محمد يا محمد يا نصر الله انزل.

**''யா முஹம்மத்! யா முஹம்மத்! ஓ! அல்லாஹ்வின் உதவியே! இறக்கிவை''** என்றுசொல்ல, முஸ்லிம்கள் அவருக் கருகே ஒன்றுகூடி தீரத்துடன் போரிட்டனர்.

நூல்: ஃபுதூஹுஷ் ஷாம், பாகம்-1, பக்கம்-196.

பன்ஸா என்னும் போருடைய வெற்றியின் போது ஒரு முறை இரவு முழுவதும் போர் நடந்து கொண்டிருந்தது. அப்போது முஸ்லிம்களின் சின்னமானது, **''யா முஹம்மத் யா**

முஹம்மத் யா நஸ்ரல்லாஹி இன்ஸில்'' என்பதாக இருந்தது.

நூல்: ஃபுதூஹுஷ் ஷாம், பாகம்-2, பக்கம்-218.

அபுல் ஜவ்ஸா ஹழ்ரத் அவ்ஸ் பின் அப்துல்லாஹ் ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர். ஒருமுறை மதீனாவில் கடுமையான பஞ்சம் ஏற்பட்டபோது, மதீனாவாசிகள் அன்னை ஆயிஷா ரழியல்லாஹு அன்ஹா அவர்களை சந்தித்து பஞ்சத்தை பற்றிச் சொல்ல, அதற்கு அன்னையவர்கள் சொன்னார்கள்,...

انظر قبر النبى صلى الله عليه وسلم فاجعلوا منه كوا الى السماء حتى لايكون بينه وبين السماء سقف قال ففعلوا فمطروا مطرا حتى نبت العشب وسمنت الابل حتى تفتقت من الشحم فسمي عام الفتق.

''நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ரௌழாவை வானத்தின் பக்கமாக அதன் வெளிச்சப் பகுதியை திறந்து விடுங்கள். அத்துடன் அதற்கும் வானத்திற்குமிடையே மறைப்பு இருக்கக்கூடாது என்றுசொல்ல, அவர்களும் அவ்வாறே செய்ய எந்த அளவுக்கு மழை பெய்ததெனில் பயிர்கள் செழித்து ஒட்டகங்களெல்லாம் கொழுத்து விட்டன. இன்னும் அவைகளுக்குள் ஏற்பட்ட கொழுப்பின் காரணமாக அவைகள் வெடித்தும் போய்விட்டன. அத்துடன் அந்த வருடத்திற்கு ''ஆமுல் ஃபதக்'' என்றும் பெயர் வைக்கப் பட்டது''

ஹழ்ரத் அப்துல்லாஹ் பின் உமர் ரழியல்லாஹு அன்ஹுவின் கால் மரத்துப் போனபோது.,,,

فقال له رجل ، اذكر احب الناس اليك فقال يا محمدا! صلى الله عليه وسلم فكأنما نشط من عقال.

''ஒருவர் அவர்களை நோக்கி, அனைவரையும் விட உங்களுக்கு மிகவும் பிரியமானவர் யாரோ அவரை அழையுங்களென்று சொல்ல, அதற்கவர்கள்; யா முஹம்மத் என்று சொல்லவும், அப்போதே அவர்கள் சுகமடைந்து விட்டனர்.

அதாவது சிறையிலிருந்து விடுபட்டவரை போல''

நூல்: அல் அத்கார், பக்கம்-271.

ஹழ்ரத் இமாம் ஹுஸைன் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் சகோதரி ஹழ்ரத் ஸைனப் ரழியல்லாஹு அன்ஹா அவர்கள் பிணைக் கைதியாக கர்பலா போர்க்களத்திலிருந்து திரும்பியபோது மிகவும் உடைந்து போனவர்களாக,...

يا محمداه! يا محمداه! صلى عليك الله وملك السماء هذا حسين بالعراء مزمل بالدماء مقطع الاعضاء يا محمداه! وبناتك سبايا وذريتك مقتلة تسفى عليها الصبا قال فابكت كل عدو وصديق.

''ஓ! மிகவும் புகழப்பட்ட உதவியே! (இருமுறை) அல்லாஹ் உங்களின் மீது தனது ரஹ்மத்தை இறக்குவானாக. இன்னும் விண்ணிலுள்ள வானவர்கள் ஸலவாத்தை சொல்வார்களாக. இந்த ஹுஸைன் இப்போது மைதானத்தில் ரத்தத்தில் தோய்ந்து போனவராக, உறுப்புகள் வெட்டப்பட்டவராகக் கிடக்கிறார். யாமுஹம்மத்! உதவி. உங்களின் பெண்பிள்ளைகள் இப்போது பிணைக்கைதிகளாக இருக்கின்றனர். உங்களின் பிள்ளைகள் ஷஹீதாக்கப்பட்டு விட்டனர். ஸபாவுடைய மண் அவர்கள்மீது தனது மண்ணை வாரி இறைத்துக் கொண்டிருக்கிறது. அறிவிப்பாளர் சொல்கிறார். அவர்களின் உருக்கமான இந்த அபயத்தை கேட்டு அவர்களின் எதிரிகள் கூட அழுதனர்''

நூல்: அல்பிதாயா வந்நிஹாயா, பாகம்-8, பக்கம்-193.

## வஸீலாவும் நபித்தோழர்களும்

இமாம் புகாரி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் அறிவிக்கின்றனர். ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் மழைக்குரிய துஆவை இவ்வாறு கேட்பவர்களாயிருந்தனர்,...

عن انس بن مالك ان عمر بن الخطاب رضى الله عنه كان اذا قحطوا استسقى بالعباس بن عبد المطلب رضى الله عنه فقال اللهم انا كنا نتوسل اليك بنبينا صلى الله عليه وسلم فتسقينا

وانا نتوسل اليك بعم نبينا فاسقنا قال فيسقون.

''ஹழ்ரத் அனஸ் பின் மாலிக் ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர். எப்போது மக்கள் பஞ்சத்தால் பீடிக்கப்பட் டாலும் உமர் பின் கத்தாப் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் ஹழ்ரத் அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுமா அவர்களின் வஸீலாவை கொண்டே மழைக்காக துஆ செய்வார்கள். இன்னும் அவர்கள் துஆ செய்யும்போது, யாஅல்லாஹ்! நாங்கள் உனது சன்னிதானத்தில் கண்ணியத்திற்குரிய நபியவர் களது சிறிய தந்தையின் வஸீலாவை முன்னிருத்துகிறோம். நீ எங்களுக்கு மழையை இறக்கியருள்வாயாக எனக் கேட்பார்க ளாயின் அவர்களுக்கு மழை இறக்கியருளப்படுவதுண்டு''

நூல் : புகாரி, பாகம்-1, பக்கம்-137.

இந்த ஹதீஸை குறித்து இப்னு தைமிய்யாவும் அவரை பின்பற்றுவோரும், உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்குப் பதிலாக அவர்களின் சிறிய தந்தை அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுவை வஸீலாவாக்கியதற்குரிய காரணமானது, நபியவர்கள் மறைந்து விட்டதால் மறைந்து விட்டவரை வஸீலாவாக்குதல் ஜாயி ஸில்லை என்பதற்காகவே அவ்வாறு செய்தனரென்று கூறுகின் றனர். இது மிகப்பெரும் தவறாகும்.

ஏனெனில் இந்த ஹதீஸை கொண்டு நல்ல அமலை மட்டும் வஸீலாவாக்குவதை விட நல்லோரை வஸீலாவாக்குவதே ஏற்றமாகும் என்பதை நபித்தோழர்களின் வழிமுறை நமக்குப் புலப்படுத்துகிறது என்பதுதான் உண்மையாகும். அத்துடன் நபித்தோழர்கள் இணைந்து இந்த வஸீலாவை கேட்கின்றனர். அவர்களில் ஒருவர்கூட இதை ஆட்சேபிக்கவில்லை.

அடுத்து அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு எப்படிப் பட்ட மகத்துவமுடையவர்கள் எனில் அவர்களையே வஸீலா வாக ஆக்கலாம். இருப்பினும் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் எப்படி கேட்கின்றனர் எனில், நாங்கள் எங்களது

நபியுடைய சிறிய தந்தையின் வஸீலாவை முன்னிருத்துகி ரேமென்று தான் கூறுகின்றனர். இது எதார்த்தத்தில் நபியவர் களையே வஸீலாவாக்கியதாகும் என்பதையும் நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

அல்லாமா பத்ருத்தீன் ஐனியின் அறிவிப்பில் காணப்படு வதாவது, உமர் ரழியல்லாஹூ அன்ஹூ அவர்கள் அப்பாஸ் ரழியல்லாஹூ அன்ஹூ அவர்களின் வஸீலாவை கொண்டு மிம்பரின் மீது துஆ செய்தனர். அதன்பின் அப்பாஸ் ரழியல் லாஹூ அன்ஹூ அவர்கள் உமரவர்களுடன் மிம்பரில் இருந்த வாறு இப்படி துஆ செய்தனர்,...

اللهم لم ينزل بلاء الا بذنب ولم يكشف الا بتوبة وقد توجه بى القوم اليك لمكانى من نبيك.

“பலாய்கள் பாவங்களின் காரணமாகவே இறங்குகின்றன. இன்னும் அவை தௌபாவை கொண்டே தூரமாகின்றன. இவர்கள் என்னுடைய வஸீலாவை கொண்டு உன்பக்கமாக திரும்பியுள்ளனர். காரணம் நான் உனது நபியுடன் தொடர்புள் ளவனாக இருக்கிறேன்”

நூல்: உம்தத்துல் காரி, பாகம்-7, பக்கம்-32.

ஹாபிழ் இப்னு அப்துல் பர்ரு அவர்கள் அப்பாஸ் ரழியல் லாஹூ அன்ஹூவின் கூற்றை பற்றி எழுதுகின்றனர்,...

وروينا من وجوه عن عمر انه خرج يستسقى وخرج معه بالعباس فقال اللهم انا نتقرب اليك بعم نبيك صلى الله عليه وسلم ونستشفع به فاحفظ فيه لنبيك صلى الله عليه وسلم كما حفظت الغلامين لصلاح ابيهما.

“எங்களுக்கு உமர் ரழியல்லாஹூ அன்ஹூவை கொண்டு பல்வேறு அறிவிப்புகள் கிடைத்துள்ளன. அதாவது அவர்கள் அப்பாஸ் ரழியல்லாஹூ அன்ஹூவோடு இஸ்த்திஸ்காவு (மழைதொழுகை)க்காக வெளிக் கிளம்பியவர்கள் துஆ செய்தார்கள். அதாவது, யாஅல்லாஹ்! நாங்கள் உனது நபி

ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுடைய சிறிய தந்தையின் வஸீலாவை கொண்டு உனது சமீபத்துவத்தை ஆசிக்கிறோம். அவர்களை எங்களின் ஷபீஆக ஆக்குகிறோம். ஆதலால் நீ அவர்களை கொண்டு உனது நபிக்காக எண்ணிப் பார்ப்பாயாக. எவ்வாறு நீ அவ்விரு குழந்தைகளுக்காகவும் அவர்களின் தந்தையுடைய நன்மையின் காரணமாக பாதுகாப் பளித்தாயோ'' (மூஸா அலைஹிஸ்ஸலாமவர்களின் காலத்தில் கிழ்ரு அலைஹிஸ்ஸலாமவர்கள் அக்குழந்தைகளின் விழப்போன சுவரை சரிப்படுத்தியது) அவ்வாறு என துஆ செய்தனர்.

நூல்: இஸ்தீஆப், பாகம்-3, பக்கம்-99.

இந்த ஹதீஸின் வாயிலாக அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹுவின் வஸீலாவை கொண்டு துஆ செய்ததானது எதார்த்தத்தில் நபியவர்களையே வஸீலாவாக்கியதாகும் என்பதை நாம் தெரிந்து கொள்கிறோம்.

அத்துடன் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை இறை சன்னிதானத்தில் வஸீலாவாக்குதல் என்பது முடிவாக்கப்பட்ட ஒரு விஷயமாகும். இதில் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபியவர்களின் சிறிய தந்தை அப்பாஸ் ரழியல்லாஹு அன்ஹு அவர்களை வஸீலா வாக்கியதன் மூலம் வஸீலா என்பது நபியவர்களுக்கு மட்டும் உரியதல்ல. மாறாக நபியவர்களின் குடும்பத்தார் மற்றும் அவர்களின் தோழர்களையும் வஸீலாவாக்கலாம் என்பதையும் நாம் தெரிந்து கொள்கிறோம். ஏனெனில் யாரும் நபியவர்களை மட்டும்தான் வஸீலாவாக்க முடியும். மற்றவர்களை வஸீலா வாக்க முடியாதென்று சொல்லிவிடக் கூடாதல்லவா! இதற் காகவே உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் நபியவர் களின் சிறியதந்தையை வஸீலாவாக்கிக் காட்டினர் என்ப தையும் நாம் புரிந்துகொள்ள வேண்டும்.

ஹழ்ரத் ஸுலைம் பின் ஆமிர் என்பார் அறிவிக்கின்றனர்,...

ان السماء قحطت فخرج معاوية بن ابى سفيان رضى الله عنه

واهل دمشق يستسقون فلما قعد معاوية على المنبر قال اين يزيد بن الاسود الجرشى؟ قال فناداه الناس فاقبل يتخطى فامره معاوية فصعد المنبر فقعد عند رجليه فقال معاوية اللهم انا نستشفع اليك اليوم بخيرنا وافضلنا اللهم انا نستشفع اليك يزيد بن الاسود الجرشى يا يزيد ارفع يديك الى الله فرفع يزيد ورفع الناس ايديهم فما كان اوشك ان ثارت سحابة فى المغرب وهبت لها ريح فسقينا حتى كاد الناس لا يتصلون الى منازلهم.

“மழை இல்லாமல் போனபோது ஹழ்ரத் முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் திமிஷ்கைச் சேர்ந்தவர்களும் துஆ செய்வதற்காக வெளியே கிளம்பினர். பின்னர் முஆவியா அவர்கள் மிம்பரில் அமர்ந்தபோது, யஸீத் பின் அஸ்வத் எங்கே என்றுகேட்க, ஜனங்கள் அவரை அழைத்தனர். அவர் துள்ளிக் குதித்தவராக வந்தார். அவர் முஆவியா ரழியல்லாஹு அன்ஹுவின் கட்டளைக்கொப்ப மிம்பரின் மீதேறி அவர்களது காலடியில் அமர்ந்தார். அப்போது முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்கள், யாஅல்லாஹ்! இன்று நாங்கள் உனது சன்னிதானத்தில் எங்களில் சிறந்தவராகிய யஸீத் பின் அஸ்வதுடைய சிபாரிசை முன்னிருத்துகிறோம் என்றவர்கள், யஸீத்! அல்லாஹ்வின் திருமுன் உமது கைகளை உயர்த்து என்றுசொல்ல, அவர் தமது கைகளை உயர்த்தினர். ஜனங்களும் தங்களின் கைகளை உயர்த்தினர். (அதன்பின் துஆ செய்தனர்.) இருந்தாற்போல் மேற்கு பக்கமிருந்து ஒருமேகம் கிளம்ப காற்றும் வீசத்துவங்கி மழை பெய்யத் துவங்கிற்று. எதுவரையெனில் ஜனங்கள் தமது வீடுகளுக்குச் செல்வதே சிரமமாகி விட்டது” நூல்: தபகாத், பாகம்-7, பக்கம்-444.

மழைக்காக துஆ செய்யப்பட்ட இக்கூட்டத்தில் நபித்தோழர்களும் தாபியீன்களும் இருந்தனர். அவர்களில் ஒரு ஸாலிஹான மனிதரை வஸீலாவாக்கி துஆ செய்ததை தவறென்று ஒருவர்கூட ஆட்சேபிக்கவில்லை. இப்படி ஒரு ஸாலிஹான

மனிதரை வஸீலாவாக்குவது ஆகுமானதே என்பதை இஜ்மா வான அவர்களின் செயல் நமக்கு புலப்படுத்துவதையும் நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

## வஸீலாவும் நான்கு இமாம்களும்

இமாமுல் அஃழம் அபூஹனீபா ரழியல்லாஹு அன்ஹு கூறுகின்றனர்,...

يا مالكى كن شافعى في فاقتى
انى فقير فى الورى لغناك
ياأكرم الثقلين ياكنز الورى
جدلى بجودك وارضنى برضاك
انا طامع بالجود منك ولم يكن
لابى حنيفة فى الانام سواك.

"ஓ! எனது மாலிகே! தாங்கள் எனது நாட்டத்திற்குரிய ஷபீஆக இருக்கிறீர்கள். நான் எல்லா சிருஷ்டிகளிலும் தங்களின் கொடையை எதிர்பார்க்கும் பஃகீராக இருக்கிறேன். ஏ! மனு ஜின்னைவிட அதிகமான கொடையாளரே! ஏ! படைப் புக்களின் பொக்கிஷமே! என்மீது இரக்கம் காட்டுங்கள். இன்னும் தங்களின் திருப்தியை கொண்டு என்னை திருப்தி கொள்ளுங்கள். நான் தங்களின் மன்னிப்பின் மீது நம்பிக்கை யுள்ளவனாக இருக்கிறேன். இன்னும் தங்களை தவிர சிருஷ்டிப் பொருட்களில் அபூஹனீபாவுக்கு வேறு யாருமில்லை"

நூல்: அல் கஸீதத்துன் நுஃமானிய்யா, பக்கம்-199,200.

இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் மஸ்ஜிதுன் நபவியில் இருந்தபோது, கலீபா மன்ஸூர் நபியவர்களை ஸியாரத்துச் செய்வதற்காக வந்தார். அப்போது அவர் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்களை நோக்கி, அபூ அப்துல்லாஹ்வே! நான் துஆ செய்யும்போது நபியவர்களை முன்னோக்குவதா? அல்லது கிப்லாவை முன்னோக்குவதா என்றுகேட்க, அதற்கு இமாம் மாலிக் ரஹிமஹுல்லாஹ் அவர்கள்,...

ولم تصرف وجهك عنه وهو وسيلتك ووسيلة ابيك آدم الى الله تعالى بل استقبله واستشفع به فيشفعه الله فيك.

"நீர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை

விட்டு உமது முகத்தை எவ்வாறு திருப்ப முடியும்? ஏனெனில் அவர்கள்தான் இறைவனுடைய சன்னிதானத்தில் உம்முடையவும் உமது தந்தை ஆதமுடையவும் வஸீலாவாக இருக்கிறார்கள். ஆதலால் அவர்களை நோக்கி உமது முகத்தை திருப்பி அவர்களிடம் ஷபாஅத்தைக் கேளும். அல்லாஹ் உமது விஷயத்தில் நபியவர்களின் ஷபாஅத்தை ஏற்றுக் கொள்வான் எனக்கூறினார்'' நூல்: ஷிபா, பாகம்-2, பக்கம்-33.

ஒரு ஆச்சரியமான விஷயம் என்னவெனில் இன்று மக்காவிலும் மதீனாவிலும் நிறையபேர் கஃபாவை நோக்கி தங்களின் கால்களை நீட்டிக்கொண்டு அமர்ந்திருப்பதை பார்க்கிறோம். அதை அங்குள்ளவர்களில் யாரும் தவறென்றும் சொல்வதில்லை. ஆனால் அதேநேரம் அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் புனிதமிகு ரௌழாவில் நபியவர்களுக்கு ஸலாமும் ஸலவாத்தும் சொல்வோரை பார்த்து கிப்லாவின் பக்ககமாக முகத்தை திருப்பி துஆ செய்யுங்கள். நபியவர்களின் பக்கமாக உங்களின் முதுகை திருப்புங்களென்று வற்புறுத்துகின்றனர்.

இமாம் ஷாபி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் கூறுகின்றனர்.,,,

آل النبى ذريعتى وهم اليك وسيلتى
ارجوا بهم اعطى غدا بيدى اليمين صحيفتى.

''நபியவர்களின் குடும்பத்தாரே எனது ஆதாரமாகும். இன்னும் அவர்கள்தான் அல்லாஹ்விடம் என்னுடைய வஸீலாவாகும். பின்னும் அவர்களுடைய வஸீலாவை கொண்டு மறுமை நாளன்று பட்டோலை எனது வலது கரத்தில் தரப்படுமென்று எனக்கு நம்பிக்கையுண்டு''

நூல்: அஸ்ஸவாயிகுல் முஹர்ரகா, பக்கம்-180.

இமாம் அஹ்மத் பின் ஹன்பல் ரஹிமஹுல்லாஹ் அவர்கள் இமாம் ஷாபி ரஹிமஹுல்லாஹ்வுடைய வஸீலாவை கொண்டு துஆ செய்ததை கண்ட அவர்களின் மைந்தர் ஆச்சரியப்பட்டார். அதைகண்ட இமாமவர்கள் தமது மைந்தரை

பார்த்து,...

ان الشافعى كالشمس للناس وكالعافية للبدن.

"இமாம் ஷாபி அவர்களுக்கு உதாரணமானது, எவ்வாறு மனிதர்களுக்கு சூரியனை கொண்டு தேகத்திற்கு ஆரோக்கியம் இருக்கிறதோ அவ்வாறு என்றனர்"

நூல்: ஷவாஹிதுல் ஹக், பக்கம்-166.

## வஸீலாவும் உலமாக்களிலுள்ள இமாம்களும்

வஸீலாவை குறித்து உலமாக்களிலுள்ள இமாம்களின் செய்திகளையும் சம்பவங்களையும் நாம் தொகுக்கத் துவங்கினால் அதுவே ஒரு மிகப்பெரிய நூலாக விரிந்துவிடும் என்பதில் சந்தேகமில்லை. ஆதலால் இங்கே குறிப்பிட்ட சிலரது செய்திகளை மட்டும் உங்களின் மேலான பார்வைக்கு தருகிறோம்.

இமாம் கஸ்ஸாலி ரஹிமஹுல்லாஹ் அவர்கள் பயணத்தின் ஒழுங்குமுறை பற்றி,...

பயணத்தின் இன்னொரு பகுதியில் நபிமார்கள், ஸஹாபாக்கள், தாபிஈன்கள், மற்றுமுள்ள வலிமார்கள், உலமாக்கள் போன்றோரை ஸியாரத்துச் செய்வதாகும். இதில் ஒருவர் வாழுகின்ற காலத்தில் யாரை சந்திப்பதன் மூலமாக பரக்கத்துப் பெறப்பட்டதோ அவரது இறப்புக்குப் பின்னாலும் அவரை கொண்டு பரக்கத்தை பெற முடியும் என்று கூறுகின்றனர்.

இமாம் இப்னுல்ஹாஜ். இவர்கள் மார்க்க சம்பந்தமான விஷயத்தில் மிகவும் கடுமையானவர்கள். இவர்கள் வலிமார்கள், நபிமார்கள், குறிப்பாக அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் போன்றோரிடம் வஸீலா தேடுவதை குறித்தும் உதவி தேடுவதன் முறை குறித்தும் விரிவாகவும் அதேநேரம் சுருக்கமாகவும் விபரித்துள்ளார்கள். அவைகளிலிருந்து சிலவற்றை மட்டும் உங்களின் பார்வைக்கு இங்கே எடுத்துக் காட்டுகிறோம்.

ஒருவேளை இறந்தவர் ஒரு பாமரராக இருப்பாராயின் அவரது கப்ரை ஸியாரத்துச் செய்வதற்குரிய முறையானது, கிப்லாவின் பக்கமாக அமர்ந்து கப்ரை முன்னோக்க வேண்டும். அதன்பின் முதலில் அல்லாஹ்வை புகழ்ந்து பின்னர் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் மீது ஸலவாத்து சொல்லி இயன்றவரை அக்கப்ராளிக்காக துஆ செய்ய வேண்டும். பின்னர்,...

وكذالك يدعوا عند هذه القبور عند نازلة نزلت به او بالمسلمين ويتضرع الى الله تعالى فى زوالها وكشفها عنه وعنهم.

"அந்தக்கப்ருக்கு போய் துஆ செய்ய வேண்டும். இனி அக்கப்ராளியின் மீதோ அல்லது முஸ்லிம்களின் மீதோ ஏதேனும் துன்பம் இறங்குமாயின் அல்லாஹ்விடம் அழுது அத்துன்பம் அக்கப்ராளியை விட்டும் முஸ்லிம்களை விட்டும் நீங்க வேண்டுமென துஆ கேட்க வேண்டும்"

நூல்: அல்முத்கல், பாகம்-1, பக்கம்-248.

ثم يتوسل باهل تلك المقابر اعنى بالصالحين منهم فى قضاء حوائجه ومغفرة ذنوبه ثم يدعوا لنفسه ولوالديه ولمشائخه ولاقاربه ولاهل تلك المقابر ولاموات المسلمين ولاحيائهم وذريتهم الى يوم الدين ولمن غاب عنه من اخوانه ويجأر الى الله تعالى بالدعاء عندهم ويكثر التوسل بهم الى الله تعالى لانه سبحانه اجتباهم وشرفهم وكرمهم فكما نفع بهم فى الدنيا ففى الآخرة اكثر فمن اراد حاجة فليذهب اليهم ويتوسل بهم فانهم الواسطة بين الله تعالى وخلقه. وقد تقرر فى الشرع وعلم ما لله تعالى بهم من الاعتناء وذالك كثير مشهور وما زال الناس من العلماء والاكابر كابرا عن كابر مشرقا ومغربا يتبركون بزيارة قبورهم ويجدون بركة ذالك حسا ومعنى.

"பின்னர் தமது நாட்டங்கள் நிறைவேறுவதற்காகவும் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காகவும் வலிமார்களின் வஸீலாவை முன்னிருத்த வேண்டும். அதன்பின் தனக்காகவும்

தனது பெற்றேருக்காகவும் உறவினர்களுக்காகவும் ஷைகு மார்களுக்காகவும் அக்கப்ராளிகளுக்காகவும் மற்றும் உயிரோடுள்ள இறந்து போய்விட்ட முஸ்லிம்களுக்காகவும் இன்னும் மறுமை நாள்வரை வரவிருக்கும் தனது சந்ததிகளுக்காகவும் மற்றும் மறைவாக இருப்பவர்களுக்காகவும் துஆ செய்ய வேண்டும்.

இன்னும் அந்த வலிமார்களின் முன்ஞல் நின்று மிகவும் தாழ்மையாக அல்லாஹ்விடம் துஆ செய்ய வேண்டும். அப்போது அதிகமாக அவர்களின் வஸீலாவை முன்னிருத்த வேண்டும். ஏனெனில் அல்லாஹ் அவர்களை தனது வஸீலாவாக தேர்ந்தெடுத்திருக்கிருன். அத்துடன் அவர்களை கண்ணியத்தை கொண்டும் கராமத்தை கொண்டும் அழகு படுத்தியிருக்கிருன். எவ்வாறு உலகிலுள்ள போது அவர்களை கொண்டு பிரயோஜனத்தை அருள் புரிந்தாஞே அதேபோல மறுமையில் அதைவிட பன்மடங்கு அதிகமான பிரயோஜனமுண்டு. இனி எவரேனும் எதையாவது நாடுவாரேயாயின் அவர் அவர்களிடம் சென்று அவர்களின் வஸீலாவை முன்னிருத்த வேண்டும். ஏனெனில் அவர்கள் அல்லாஹ்வுக்கும் அவர்களுக்கும் இடையே வாஸிதாவாக இருக்கின்றனர்.

மேலும் ஷரீஅத்தில் அல்லாஹ் அவர்களை எந்த அளவுக்கு கண்ணியப்படுத்தி உள்ளான் என்பது நமக்கு தெரிந்தது மட்டுமின்றி உறுதிப்படுத்தப்பட்டும் உள்ளது. மேலும் கிழக்கு மேற்கு பகுதியை சேர்ந்த மகத்தான உலமாக்களும் தலைவர்களும் வலிமார்களின் கப்ரை ஸியாரத்துச் செய்வதை கொண்டு பரக்கத்தை பெற்றுள்ளனர் என்பதும் மிகவும் பிரபலமானதாகும். மேலும் உணர்வளவிலும் எதார்த்தத்திலும் அவர்களின் பரக்கத்தை பலரும் பெற்று வந்துள்ளனர்"

நூல்: அல்முத்கல், பாகம்-1, பக்கம்-249.

பின்னர் அஷ்ஷைகு இமாம் அபூ அப்துல்லாஹ் பின் நுஃமான் ரஹ்மஹுல்லாஹ் அவர்கள் சொல்வதை நகல் செய்கின்றனர்,...

تحقق لذوى البصائر والاعتبار ان زيارة قبور الصالحين محبوبة لاجل التبرك مع الاعتبار فان بركة الصالحين جارية بعد مماتهم كما كانت فى حياتهم والدعاء عند قبور الصالحين والتشفع بهم معمول به عند علماء المحققين من ائمة الدين.

“அகப்பார்வையுடையோரிடம் அவர்களது திடமான நம்பிக்கையை கொண்டு ஆதாரப்படுத்தப்பட்டுள்ளதாவது, வலிமார்களின் கப்ருகளை ஸியாரத்துச் செய்வதானது பரக்கத்தையும் படிப்பினையையும் பெற்றுக் கொள்வதற்குரிய விரும்பத்தக்க ஒன்றாகும். ஏனெனில் வலிமார்களின் பரக்கத்தானது அவர்களது வெளித்தோற்ற வாழ்க்கையை போன்றே அவர்களது மறைவுக்குப் பின்னரும் நிகழுகின்றது. பின்னும் வலிமார்களின் கப்ருகளில் துஆ செய்வதும் அவர்களை வஸீலாவாக்குவதும் நமது முஹக்கிகீன்கள் மற்றும் இமாம்களின் வழக்கமாகும்”

நூல்: அல்முத்கல், பாகம்-1, பக்கம்-249.

இதன்பின் நபிமார்கள் ரஸூல்மார்கள் போன்றோரின் புனிதமிகு கப்ருகளை ஸியாரத்துச் செய்வதற்குரிய முறைபற்றி இவ்வாறு கூறுகின்றனர்,...

واما عظيم جناب الانبياء والرسل صلوات الله وسلامه عليهم اجمعين فيأتى اليهم الزائر ويتعين عليه قصدهم من الاماكن البعيدة فاذا جاء اليهم فليصف بالذل والانكسار والمسكنة والفقر والحاجة والاضطرار والخضوع. ويحضر قلبه وخاطره اليهم والى مشاهدتهم بعين قلبه لا بعين بصره. لانهم لا يبلون ولا يتغيرون ثم يثنى على الله تعالى بما هو اهله ثم يصلى عليهم ويترضى عن اصحابهم ثم يترحم على التابعين لهم باحسان الى يوم الدين ثم يتوسل الى الله تعالى بهم فى قضاء مآربه ومغفرة ذنوبه ويستغيث بهم ويطلب حوائجه منهم ويجزم الاجابة ببركتهم ويقوي حسن ظنه في ذالك فانهم باب الله المفتوح.

''நபிமார்கள் மற்றும் ரஸூல்மார்கள் போன்ேறாரின் மகத்தான சன்னிதானத்திற்கு ஸியாரத்திற்காக செல்வோர் தொலைவிலிருந்தே ஸியாரத்துச் செய்வது கண்டிப்பாக அவசியமாகும். இன்னும் அப்பரிசுத்தவான்களின் சன்னிதானத்திற்கு வருகை தருவோர் மிகவும் தாழ்மையாக, பணிவாக, தழுதழுத்த மெதுவான குரலில் தனது நாட்டத்தை கேட்க வேண்டும். அத்துடன் தனது உள்ளத்தை அவர்கள் முன் ஆஜர்படுத்த வேண்டும். முகக்கண்ணை விட்டு அகக்கண்ணால் அவர்களது ஸியாரத்தை முன்னோக்க வேண்டும். ஏனெனில் நபிமார்களின் புனித தேகத்தில்எந்தவொரு பாதகமோ அல்லது மாற்றமோ எப்போதும் நிகழ்வதில்லை. அதன்பின் அல்லாஹ்வை புகழ்ந்து நபிமார்களின் மீது ஸலவாத்துச் சொல்ல வேண்டும். அவர்களின் தோழர்களுக்காக இறை திருப்தியை கேட்க வேண்டும். இவ்வாறே இறுதிநாள் வரை அத்தோழர்களின் அடிச்சுவட்டில் நடப்போருக்காக ரஹ்மத்தை கேட்க வேண்டும்.

அதன்பின் தனது நாட்டம் நிறைவேறுவதற்காகவும் தமது பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காகவும் அல்லாஹ்விடம் அவர்களை வஸீலாவாக்க வேண்டும். இன்னும் அவர்களை கொண்டு தனக்கு உதவி கிடைக்க வேண்டுமென கேட்க வேண்டும். அத்துடன் தனது தேவைகளை அவர்களிடம் முறையிடுவதோடு தமது துஆ கண்டிப்பாக அங்கீகரிக்கப் படும் என்றும் முழுமையாக நம்ப வேண்டும். இவ்விஷயத்தில் முடிந்தவரை நல்லெண்ணத்தை கொண்டே காரியமாற்ற வேண்டும். ஏனெனில் இவர்கள் அல்லாஹ்வின் திறந்து வைக்கப்பட்டுள்ள வாயில்களாகும்.

மேலும் இறைவனின் மகத்தான வழக்கமானது, அந்த நல்லோரின் காரணமாக அவர்களது கரத்தை கொண்டு நாட்டங்களை நிறைவேற்றி வைக்கிறான். இனி யார் அந்நல் லோரின் தர்பாருக்கு செல்ல முடியவில்லையோ அவர்கள் அவர்களின் தர்பாருக்கு தங்களின் ஸலாமை எத்திவைக்க வேண்டும். அத்துடன் தமது நாட்டம் நிறைவேறுவதற்கா

கவும் தங்களின் பாவங்கள் மன்னிக்கப்படுவதற்காகவும் தமது குறைகள் மறைக்கப்படுவதற்காகவும் அவைகளை அவர்களிடம் மானசீகமாக முறையிடவும் வேண்டும். ஏனெனில் அவர்கள் ஸாதாத்துகளாக இருப்பதால் கேட் போரின் கேள்விகளையும், வஸீலாவையும், நாட்டம் வைப் போரின் நாட்டத்தையும், பாதுகாப்பு தேடுவோரின் வேண்டு தலையும் அவர்கள் ஒருபோதும் ஏற்காமல் இருப்பதில்லை''

நூல்: அல்முத்கல், பாகம்-2, பக்கம்-251.

## வள்ளல் நபியை வஸீலாவாக்குதல்

### இமாம் இப்னுல்ஹாஜ்

''ஸையிதுல் அவ்வலீனும் ஆகிரீனுமாகிய ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களை ஸியாரத்துச் செய்யும்போது மிக மிகப் பணிவாகவும் தாழ்மை உணர்வோடும் இயன்றவரை மெதுவாகவும் ஸியாரத்துச் செய்ய வேண்டும். ஏனெனில் அவர்கள் அங்கீகரிக்கப்பட்ட ஷஃபீஆகவும் ஷஃபாஅத்திற்கு உரியவர்களாகவும் இருக்கின்றனர். அவர்களின் ஷஃபாஅத் ஒருபோதும் மறுக்கப்படுவதில்லை. அவர்களிடம் தனது தேவையை முறையிடுபவர், அவர்களை வஸீலாவாக ஆக்கு பவர், அவர்களின் தர்பாரில் ஆஜராகுபவர், அவர்களிடம் இஸ்த்திகாதாவையும் இஸ்த்திஆனத்தையும் தேடுபவர் கண்டிப்பாக வெறுங்கையாக திரும்பவே மாட்டார். காரணம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் பூரணத்து வத்தின் குத்பாகவும் இறைவனது சாம்ராஜ்ஜியத்தின் மாப்பிள்ளையாகவும் இருக்கின்றனர்.

இனி யார் அவர்களை வஸீலாவாக்குகின்றாரோ, அவர்களை காரணமாக்கி உதவி தேடுகிறாரோ, தனது நாட்டத்தை கேட்கி றாரோ அவர் வெறுங்கையாக திருப்பி அனுப்பப்படுவதே யில்லை. இது சோதித்து அறியப்பட்டதாகும். அதேநேரம் அவர்களது ஸியாரத்தில் ஒழுக்கம் மிகவும் முக்கியமாகும். நமது உலமாக்கள் கூறுகின்றனர். ஸியாரத்துச் செய்பவர் தன்னை நபியவர்கள் முன் இருப்பதாக உணர வேண்டும்.

எவ்வாறு நபியவர்கள் ஜீவியத்தோடு இருக்கும் காலத்தில் இருந்தார்களோ அவ்வாறு தான் இப்போதும் இருக்கின்றார்களென்று எண்ண வேண்டும். ஏனெனில் அவர்களின் இருப்பிலும் இறப்பிலும் எந்தவொரு மாற்றமும் இல்லை. அவர்கள் தமது உம்மத்தை பார்த்துக் கொண்டுள்ளனர். இன்னும் அவர்களின் நிலைமைகள், எண்ணங்கள், நாட்டங்கள், சிந்தனை போன்ற அனைத்தையும் அவர்கள் பார்த்துக் கொண்டுள்ளனர். அத்துடன் அவையனைத்தும் அவர்களுக்கு முன்னால் வெளியாகியுள்ளது. அதில் எந்தச் சந்தேகமுமில்லை''

நூல்: அல்முத்கல், பாகம்-1, பக்கம்-252.

அடுத்து அல்லாமா முல்லா அலிகாரி ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர்,...

قيل اذ تحيرتم فى الامور فاستعينوا من اهل القبور.

''நீங்கள் பல்வேறு காரியங்களில் திகைப்படைந்து விடுவீர்களாயின் கப்ருடையவர்களை கொண்டு உதவி தேடுங்கள் எனக் கூறப்பட்டுள்ளது. அதாவது கப்ராளிகளின் வஸீலாவை கொண்டு துஆ செய்யுங்கள். அல்லாஹ் நாட்டங்களை நிறைவேற்றுவான்''

நூல்: ஷரஹ் முஸ்னத் இமாமுல் அஃழம், பக்கம்-114.

அல்லாமா தகிய்யுத்தீன் சுப்கீ ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர்,...

اعلم انه يجوز ويحسن التوسل والاستعانة والتشفع بالنبى صلى الله عليه وسلم الى ربه سبحانه وتعالى وجواز ذالك وحسنه من الامور المعلومة لكل ذى دين المعروفة من فعل الانبياء والمرسلين ولم ينكر احد ذالك من اهل الاديان ولا سمع به فى زمن من الازمان حتى جاء ابن تيمية فتكلم فى ذالك بكلام يلبس فيه على الضعفاء الاغمار.

''அண்ணல் நபி ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களை வஸீலாவாக்குவதும், அவர்களிடம் உதவி தேடுவதும்,

அல்லாஹ்விடம் அவர்களை ஷஃபாஅத்திற்குரியவர்களாக ஆக்குவதும் ஜாயிஸானதும் சுன்னத்துமாகும். மேலும் இது ஆகுமானதென்பதையும் சுன்னத் என்பதையும் முஃமின்கள் நன்ருக அறிவார்கள். இன்னும் இது நபிமார்கள், ரஸூல்மார்கள், ஸலபுஸ் ஸாலிஹீன்கள், உலமாக்கள் மற்றும் பாமர முஸ்லிம்களின்நடைமுறையுமாகும். எந்த மார்க்கவாதியும் இதை மறுக்கவில்லை. இவ்வாறே எந்தக் காலத்திலும் இதை எவரும் மறுத்ததாக கேட்டதுமில்லை. எதுவரை எனில் இப்னு தைமிய்யா வந்தார். அவர்தான் இவ்விஷயத்தில் பேசத் துவங்கினர். அவர் பலவீனர்களையும் அறிவற்றவர்களையும் மோசம் செய்தார்'' நூல்: ஷிபாவுஸ் ஸகாம், பக்கம்-160.

அல்லாமா இப்னு ஹஜர் அஸ்கலானி ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர்,...

ياسيدى يارسول الله قد شرفت قصائدى بمديح قد رصفا
مدحتك اليوم ارجوا الفضل منك غدا من الشفاعة فالحظى بها طرفا
بكم توسل يرجوا العفو عن زلل من خوفه جفنه الهامى لقد ذرفا

"என் ஸையிதே! ஓ! அல்லாஹ்வுடைய ரஸூலே! தங்களை புகழ்ந்து பாடப்பட்ட எனது கவிதைகள் சிறப்புக்குரியதாகி விட்டன. இன்று நான் உங்களின் கவிதையை பாடியுள்ளேன். நாளை எனக்கு உங்களின் ஷபாஅத்தின் மீது நம்பிக்கையுண்டு. அங்கே என்னை கவனத்தில் கொள்ளுங்கள். பாவியான இந்த அடியான் உங்களை வஸீலாவாக்கி இருக்கிறேன். அவனது பாவங்கள் மன்னிக்கப்பட்டு விடுமென்ற நம்பிக்கையுண்டு. அச்சத்தின் காரணமாக அவனது இமைகளிலிருந்து கண்ணீர் வழிந்து கொண்டுள்ளது''.

நூல்: அல் மஜ்முஅத்துன் நப்ஹானிய்யா, பா-2, ப-391.

எல்லா தரப்பினராலும் கண்ணியமான பார்வை கொண்டு பார்க்கப்படும் ஹழ்ரத் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் தெஹ்லவி ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர்,...

واظهر لى الاسرار وعرفنى بنفسه وامدنى امدادا عظيما اجماليا

وعرفنى كيف استمد به فى حوائجى.

"நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்கள் என் மீது ரகசியங்களை வெளிப்படுத்தினர். இன்னும் அந்த வஸ்துக் களை பற்றியும் அறிவித்துத் தந்தனர். இன்னும் எனக்கு ஒட்டு மொத்தமாக மிகப்பெரும் உதவியும் செய்தனர். மேலும் நான் எனது தேவைகளின் போது எவ்வாறு உதவி தேட வேண்டு மென்பதையும் எனக்கு சொல்லித் தந்தனர்"

நூல்: புயூழுல் ஹரமைன், பக்கம்-86.

## வஸீலாவும் அஹ்லெ ஹதீஸ் உலமாக்களும்

இதற்குமுன் எந்தெந்த உலமாக்களிலுள்ள பெரியோர் களின் அறிவிப்புக்களை நாம் எடுத்துக் காட்டியுள்ளோமோ அவையனைத்தும் அழுத்தமான ஆதாரங்களும் போற்றுதலுக் குரிய ஒன்றுமாகும். இப்போது நாம் எடுத்துக் காட்டப்போகும் செய்திகள் கைரெ முகல்லிதீன்களாகிய வஹாபிகளால் மதிக்கப் படும் உலமாக்களின் கூற்றுக்களாகும்.

அல்லாமா இப்னு கையிம் எழுதுகிறார்,...

لا سبيل الى السعادة والفلاح لا فى الدنيا ولا فى الآخرة الا على ايدى الرسل (الى ان قال) ولا ينال رضاء الله البتة الا على ايديهم

"இம்மையிலும் மறுமையிலும் நன்மையும் ஈடேற்றமும் நபியவர்களின் கரத்தில் தானுள்ளது. இன்னும் அல்லாஹ்வின் திருப்தியும் அவர்களின் கரத்தில் தானுள்ளது"

நூல்: ஸாதுல் மஆத், பாகம்-1, பக்கம்-15.

அல்லாமா இப்னு தைமிய்யா தமது "அத்தவஸ்ஸுல் வல் வஸீலா" என்னும் நூலில், ஸஹாபாக்களான முஹாஜிர் மற்றும் அன்ஸாரித் தோழர்களுக்கு மத்தியில் உமர் ரழியல் லாஹு அன்ஹு அவர்களின் துஆ ஸஹீஹானதும் அனைத்து கல்விமான்களாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டதுமாகும். ஹழ்ரத் உமர் ரழியல்லாஹு அன்ஹு அவர்கள் அப்பாஸ் ரழியல் லாஹு அன்ஹு அவர்களின் வஸீலாவை கொண்டு துஆ

செய்தனர் என்று எழுதுகிறார்.

هذا دعاء اقره عليه جميع الصحابة لم ينكر عليه احد مع شهرته وهو من اظهر الا جماعات الاقرارية ودعا بمثله معاوية بن ابى سفيان فى خلافته

"இந்த துஆவை எல்லா நபித்தோழர்களும் அங்கீகரித்தனர். யாரும் மறுக்கவில்லை. அத்துடன் இந்த துஆ மிகவும் பிரபலமானதாகும். மேலும் இது தெளிவான இஜ்மாஇய்யத்தை கொண்டு ஏற்றுக் கொள்ளப்பட்டதுமாகும். இதே போன்றதொரு துஆவை ஹழ்ரத் முஆவியா ரழியல்லாஹு அன்ஹு அவர்களும் தமது ஆட்சிக் காலத்தில் கேட்டுள்ளனர்"

நூல்: துஹ்பத்துல் அஹ்வதீ, பாகம்-4, பக்கம்-282.

அல்லாமா காழி ஷவ்கானி எழுதுகிறார்,...

ان التوسل به صلى الله عليه وسلم يكون في حياته وبعد موته وفي حضرته ومغيبته. انه قد ثبت التوسل به صلى الله عليه وسلم في حياته وقد ثبت التوسل بغيره بعد موته باجماع الصحابة.

"நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடம் வஸீலா என்பது அவர்களின் ஜீவிய காலத்திலும் மறைவுக்குப் பின்னும் உண்டு. இவ்வாறே அவர்களின் தர்பாரிலும் உண்டு. தொலைவிலும் உண்டு. பின்னும் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் ஜீவிய காலத்தில் அவர்களை வஸீலாவாக்கியதற்குரிய ஆதாரமுண்டு. ஆனால் அவர்களின் மறைவுக்குப் பின்னால் மற்றவர்களை கொண்டு வஸீலா ஆதாரப்படுத்தப்பட்டுள்ளது"

நூல்: துஹ்பத்துல் அஹ்வதீ, பாகம்-4, பக்கம்-282.

நவாப் வஹீதுஸ் ஸமான் எழுதுகிறார்,...

وليت شعرى اذا جاز التوسل الى الله بالاعمال الصالحة فيقاس عليها التوسل بالصالحين ايضا قال الجزرى فى الحصن في آداب الدعاء منها ان يتوسل الى الله تعالى بانبيآئه والصالحين من عباده.

"இனி குர்ஆன் ஹதீஸை கொண்டு இறைவனுடைய சன்னிதானத்தில் நல்லமலை வஸீலாவாக்குதல் ஜாயிஸான ஒன்றெனில் வலிமார்களை வஸீலாவாக்குவதும் இதன்மீது அனுமானிக்கப்படும். அல்லாமா ஜஸ்ரீஹிஸ்னுல் ஹஸீனில், துஆவுக்குரிய ஒரு ஒழுக்கமானது அல்லாஹ்விடம் நபிமார்களையும் வலிமார்களையும் வஸீலாவாக்குவதாகும் எனக் கூறுகின்றனர்" நூல்: ஹத்யத்துல் மஹ்தி, பக்கம்-48.

## வஸீலாவும் தேவ்பந்த் உலமாக்களும்

மௌலவி ரஷீத் அஹ்மத் கங்கோஹியிடம் கீழ்கண்ட கவிதையை குறித்து வினவப்பட்ட போது அதற்கவர் தந்த பதிலானது,...

يا رسول الله انظر حالنا يا حبيب الله اسمع قالنا

انني في بحر غم مغرق خذ يدى سهل لنا اشكالنا

يااكرم الخلق مالي من الوذ به سواك عند حلول الحادث العمم

"இப்படிப்பட்ட வாக்கியங்களை ராகமிட்டோ அல்லது சாதாரணமாகவோ விர்தாக்குதல் மக்ருஹ் தன்ஸீஹாகும். அன்றி குப்ரோ பெரும்பாவமாகவோ ஆகாது"

நூல்: பதாவா ரஷீதிய்யா, பக்கம்-69.

மௌலவி அஷ்ரப் அலி தானவி தனது ஷைகு ஹாஜி இம்தாதுல்லாஹ் மக்கீ அவர்களுக்கு எழுதியதை பாருங்கள்,...

يامرشدى يامولائى يامفزعى ياملجائى في مبدئى وعادى

ارحم على ايا غياث فليس لي كهفي سوى حبكم من زادى

فاز الانام بكم وانى هائم فانظر الى برحمة يا هاد

يا سيدى لله شيئا انه انتم لى المجدى واني جادى

"என் முர்ஷிதே! என் மௌலாவே! எனது திகைப்பை அகற்றும் நேசரே! எனது இம்மை மறுமையின் ஆதரவே! ஓ! எனது புலம்பலை கேட்பவரே! என்மீது இரக்கம் காட்டும். நான் செல்லும் பாதைக்கு கட்டுச் சாதமாக என்னிடம் உமது நேசத்

தையன்றி வேறெதுவுமில்லை. படைப்புக்கள் உம்மை கொண்டு பயனடைகின்றன. நான் திகைப்பிலிருக்கிறேன். இரக்கத்தின் ஹாதியே! கொஞ்சம் இந்தப் பக்கமும் பாரும். என் தலைவரே! அல்லாஹ்வுக்காக ஏதாவது தாரும். நீர் அருளப்பட்டவராயிருக்கிறீர். நான் அல்லாஹ்வுக்காக யாசிப்பவனாக இருக்கிறேன்''

நூல்: தத்கிரத்துர் ரஷீத், பாகம்-1, பக்கம்-114.

மௌலவி அஷ்ரப் அலி தானவி அண்ணல் நபியிடம் எப்படி கேட்கிறாரென்பதை பாருங்கள்,...

يا حبيب الاله خذ بيدى　　مالعجزى سواك مستندى

كن رحيما لذلتى واشفع　　يا شفيع الورى الى الصمد

اعتصامى سوى جنابك لى　　ليس يا سيدى الى احد

''ஓ! அல்லாஹ்வின் நேசரே! என்னை ஆதரியுங்கள். எனது இயலாமையை நீக்க உங்களை தவிர வேறு போக்கிடமில்லை. தாங்கள் எனது தவறுகள் மீது இரக்கம் காட்டுங்கள். இன்னும் படைப்புக்களுக்கெல்லாம் ஷபாஅத்துச் செய்பவரே! அல்லாஹ்விடம் எனக்காகவும் ஷபாஅத்துச் செய்யுங்கள். ஆக்கா! உங்களின் தர்பாரை தவிர எனக்கு வேறு ஆதரவில்லை. இறுதியில் ஸஹாபா தாபியீன்களின் தர்பாரில் கேட்கிறோம். பலவீனமானவர்களுக்காகவும் துன்பத்தில் அகப்பட்டோருக்காகவும் (அல்லாஹ்விடம்) உதவி தேடுங்கள். இன்னும் உதவிக்காக தயாராகி விடுங்கள்''

நூல்: ழமானுத் தக்மீல் ஃபீ ஸமானித் தஃஜீல், பக்கம்-172.

## நத்வத்துல் உலமா லக்னோ

லக்னோவிலுள்ள நத்வத்துல் உலமாவை சேர்ந்த மௌலவி புர்ஹானுத்தீன் அவர்கள் மௌலவி அபுல் ஹஸன் அலி நத்வியின் கேள்வியொன்றுக்கு தந்த பத்வாவை பாருங்கள்,...

ان الاعتقاد بالتوسل بالانبياء ليس شركا فالمتوسل ليس بمشرك فنرجو الله تعالى ان يتقبل اعماله الصالحة من الصلوة والحج وغيرهما.

"நபிமார்களிடம் வஸீலாவை குறித்து நம்பிக்கை வைப்பது ஷிர்க்காகாது. எனவே வஸீலா தேடுபவர் முஷ்ரிக்காகவும் மாட்டார். இந்நிலையில் அவருடைய நல்லமல்கள், தொழுகை, ஹஜ் போன்றவை ஒப்புக் கொள்ளப்படுமென்று நாம் நம்புகிறோம்" நூல்: ஹர்பே ஹக்கானியத், பக்கம்-161.

## ஷைகு அப்துல்லாஹ் பின் பாஸ்

ஸஊதி அரேபியாவின் தலைமை முப்தியான அப்துல் அஸீஸ் பின் அப்துல்லாஹ் பின் பாஸ் அவர்கள் மௌலானா முஹம்மத் ஆஷிக்குர் ரஹ்மான் காதிரி இலாஹாபாதி அவர்களுக்கு ஹிஜ்ரி 1400 துல்ஹஜ் மாதம் 20 தேதியன்று முன்னரே எழுதப்பட்ட பத்வா ஒன்றை அனுப்பியிருந்தார். அதில் அவர் வஸீலாவை நான்கு வகையாக பிரிக்கிறார். அதாவது,...

الثالث : ان يسأل الله بجاه انبيآئه او ولي من اوليآئه ............فهذا لا يجوز. الرابع ، ان يسأل الله العبد ربه حاجته مقسما بوليه او نبيه او بحق نبيه او اوليآئه........................فهذا لا يجوز.

"1) உயிரோடுள்ள வலியிடம் இரண விஸ்தீரனத்தை குறித்தோ, வியாதி நீங்க வேண்டுமென்றோ அல்லது ஹிதாயத்துக்கு தௌபீக் செய்ய வேண்டுமென்றோ துஆ கேட்பது ஜாயிஸாகும்.

2) அல்லாஹ்விடம் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் நேசம் மற்றும் பின்பற்றுதலை, இவ்வாறே வலிமார்களின் நேசத்தை வஸீலாவாக்குவதும் ஜாயிஸாகும்.

3) அல்லாஹ்விடம் நபிமார் மற்றும் வலிமார்களின் மகத்துவத்தை வஸீலாவாக்கி துஆ செய்வது ஜாயிஸாகாது.

4) அடியான் தனது நாட்டத்தை அல்லாஹ்விடம் கேட்கும் போது நபி அல்லது வலியின் மீது சத்தியமிட்டோ அல்லது பிஹக்கி நபிய்யிஹி, பிஹக்கி வலிய்யிஹி என்றோ கேட்பதும் ஜாயிஸாகாது" நூல்: ஹர்பே ஹக்கானியத், பக்கம்-217.

# வலிமார்களிடம் வஸீலா

ஹழ்ரத் ஷாஹ் வலியுல்லாஹ் முஹத்திஸ் தெஹ்லவி ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர். எங்கள் பகுதியில் ஷுத்தாரிய்யா தரீக்காவானது ஷைகு முஹம்மத் கௌஸ் குவாலியரி அவர்களின் மூலமாகத்தான் பிரபலமாயிற்று. அதற்குமுன் அந்த தரீக்கா அவ்வளவாக பிரபலமாகவில்லை. சுருங்கக் கூறின் எனக்கு இந்த கிர்காவை ஷைகு அபூதாஹிர் குர்தியால் அணிவிக்கப்பட்டேன். அதன்பின் அவர்கள் ஜவாஹிருல் கம்ஸாவை அமல் செய்வதற்குரிய அனுமதியை எனக்குத் தந்தனர்.

பின்னர் நான் ஹஜ்ஜிலிருந்து லாஹுருக்கு திரும்பி வந்த போது ஷைகு முஹம்மத் ஸயீத் லாஹுரிஅவர்களை சந்தித்து அவர்களின் கைகளை முத்தமிட்டேன். அப்போது அவர்கள் எனக்கு "துஆயே ஸைபீ" யையும் ஜவாஹிருல் கம்ஸாவிலுள்ள எல்லா அமலையும் செய்வதற்குரிய அனுமதியை வழங்கினர். அவர்கள் அக்காலத்தில் தரீகா அஹ்ஸனிய்யா மற்றும் ஷுத்தாரிய்யாவின் ஷைகுமார்களுடைய தலைவராக இருந்து வந்தனர். அந்த ஜவாஹிருல் கம்ஸாவிலுள்ள அமல் இதுதான். ஒரு காரியத்தில் வெற்றியடைவதற்காக தினந்தோறும் ஐநூறு முறை இதை ஓத வேண்டும்,...

ناد عليا مظهر العجائب تجده عونا لك فى النوائب كل هم وغم
سينجلي بنبوتك يا محمد وبولايتك ياعلي ياعلي ياعلي.

இந்த துஆவில் என்ன இருக்கிறது? நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களிடமும் ஹழ்ரத் அலி ரழியல்லாஹு அன்ஹு அவர்களிடமும் வஸீலாவும் உதவியும் தேடப்படுகிறது. ஒருவேளை இதில் ஏதாவது ஷிர்க் இருக்குமாயின் ஷாஹ் வலியுல்லாஹ் அவர்கள் ஜவாஹிருல் கம்ஸாவை அமல் செய்வதற்கு எப்படி அனுமதி கேட்டிருப்பார்கள்? நாம் யோசித்துப் பார்க்க வேண்டும்.

ஷைகுல் இஸ்லாம் ஷிஹாபுத்தீன் ரமலி அவர்களின்

அகீதாவை பாருங்கள்,...

سئل شيخ الاسلام الرملى عما يقع من العامة عند الشدائد يا شيخ فلان ونحو ذالك فهل للمشائخ اغاثه بعد موتهم؟ فاجاب بان الاستغاثة بالاولياء والانبياء والصالحين والعلماء جائزة فان لهم اغاثه بعد موتهم كحياتهم فان معجزات الانبيآء كرامة للاولياء.

"ஷைகுல் இஸ்லாம் ரமலி அவர்களிடம், பாமரர்கள் துன்பங்களின் போது யாஷைக் இன்னரே! என்றெல்லாம் அழைக்கின்றனர். என்ன? ஷைகுமார்கள் தமது மறைவுக்குப் பின்னரும் உதவி செய்வார்களா? எனக்கேட்க, அதற்கவர்கள்; நபிமார்களிடமும் வலிமார்களிடமும் ஸாலிஹீன்களான உலமாக்களிடமும் உதவி தேடுவது ஜாயிஸாகும். ஏனெனில் அவர்கள் உயிரோடுள்ள போது உதவி செய்ததை போல தங்களின் மறைவுக்குப் பின்னலும் உதவி செய்வார்கள். அதனல் தான் நபிமார்களுக்கு முஃஜிஸாவும் வலிமார்களுக்கு கராமத்தும் வழங்கப் பட்டுள்ளதென்று கூறினர்"

நூல்: மஷாரிகுல் அன்வார், பக்கம்-59.

ஹழ்ரத் ஷைகு பரீதுத்தீன் அத்தார் ரஹிமஹுல்லாஹ் கூறுகின்றனர். ஹழ்ரத் மஹ்மூத் கஸ்னவி அவர்களிடம் ஹழ்ரத் காஜா அபுல் ஹஸன் கிர்கானி ரஹிமஹுல்லாஹ் அவர்களின் ஜுப்பா ஒன்றிருந்தது. சோமநாத்தில் போர் நடை பெற்றபோது ஒரு சந்தர்ப்பத்தில் இஸ்லாமியப் படை தோற்கும் நிலை ஏற்படவே மஹ்மூத் கஸ்னவி சட்டென குதிரையை விட்டிறங்கி மறைவான இடத்தை நோக்கிச் சென்றனர். அங்கே அந்த ஜுப்பாவை கையிலேந்தி ஸுஜுதில் விழுந்து, "இறைவா! இந்த ஜுப்பாவுடையவரின் பொருட்டால் காபிர்கள் மீது வெற்றியை தா. போரில் கிடைக்கும் கனீமத்துப் பொருளை தர்வேஷ்களுக்கு மத்தியில் பங்கிட்டு விடுகிறேன்" என்று பிரார்த்தித்தார்.

திடீரென எதிரிகளுக்கு மத்தியிலிருந்து கூக்குரல் எழுந்தது. அப்போது இருள் கவிந்துவிட காபிர்கள் தங்களை தாங்களே

ஒருவரையொருவர் வெட்டிக்கொள்ள துவங்கினர். இதன் காரணமாக படைகளும் சிதறிப்போக இஸ்லாமியர்களுக்கு வெற்றி கிடைத்தது. அன்றிரவு மஹ்மூத் கஸ்னவி ஹழ்ரத் அபுல் ஹஸன் கிர்கானி அவர்களை கனவில் கண்டபோது அவர்கள் அவரை பார்த்து, மஹ்மூத்! நீர் இறைவனுடைய சன்னிதானத்தில் நமது ஜுப்பாவுக்குரிய மதிப்பை தவற விட்டு விட்டீர். ஒருவேளை நீர் விரும்பியிருந்தால் எல்லா காபிர் களுக்கும் இஸ்லாத்தை குறித்து கேட்டிருக்கலாம் என்றனர்.

ஹழ்ரத் அல்லாமா இப்னு ஆபிதீன் ஷாமி கூறுகின்றனர்,...

قرر الزيادى ان الانسان اذا ضاع له شيئ واراد ان يرد الله سبحانه عليه فليقف على مكان عال مستقبل القبلة ويقرأ الفاتحة ويهدى ثوابها للنبى صلى الله عليه وسلم ثم يهدى ثواب ذالك لسيدى احمد بن علوان ويقول يا سيدى احمد بن علوان ان لم ترد علي ضالتى والانزعتك من ديوان الاولياء فان الله يرد على من قال ذالك ضالته ببركته. اجهورى مع زيارة كذا في حاشية شرح المنهج للداؤدى رحمه الله.

“ஹழ்ரத் ஸியாதீ கூறுகின்றனர். ஒருவரது பொருள் ஏதேனும் காணமல் போய்விட்டால் அதை அல்லாஹ் திரும் பவும் அவரிடம் கொண்டுவந்து சேர்க்க வேண்டுமென்று விரும்புவாராயின் ஒரு உயரமான இடத்தில் நின்றுகொண்டு அல்ஹம்து சூருவை ஓதி அதனுடைய நன்மையை நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களுக்கும் அதன்பின் ஸையிதீ அஹ்மத் பின் அல்வான் அவர்களுக்கும் சேர்த்து வைத்துவிட்டு அதன்பின், ஸையிதீ அஹ்மதே! ஏ! இப்னு அல்வானே! எனது காணமல் போன பொருளை திருப்பித் தராவிட்டால் நான் உங்களின் பெயரை அவ்லியாக்களுடைய பட்டியலிலிருந்து நீக்கி விடுவேன் என்று சொன்னால் அல்லாஹ் அவர்களின் பரக்கத்தை கொண்டு அப்பொருளை திருப்பித் தந்து விடுவான்” நூல்: ரத்துல் முஹ்தார், பாகம்-2, பக்கம்-324.

## ஸலாத்துல் கௌஸிய்யா

ஹழ்ரத் மஹ்பூபே ஸுப்ஹானி குத்பே ரப்பானி முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வஸீலாவை கொண்டு துஆ செய்பவர் கண்டிப்பாக தனது நாட்டத்தை பெற்றுக் கொள்வார். ஸையிதினா கௌஸுல் அஃழம் ரழியல்லாஹு அன்ஹு கூறுவதைப் பாருங்கள்,...

من استغاث بي في كربة كشفت عنه ومن ناداني باسمي في شدة فرجت عنه ومن توسل بي الى الله عز وجل في حاجة قضيت له ومن صلى ركعتين ويقرأ في كل ركعة بعد الفاتحة سورة الاخلاص احدى عشرة مرة ثم يصلى على رسول الله بعد السلام ويسلم عليه ويذكرني ثم يخطوا الى جهة العراق احدى عشرة خطوة ويذكر اسمي ويذكر حاجته فانها تقضى باذن الله.

"ஒருவர் தமது துன்பத்தின் போது எனது வஸீலாவை கொண்டு உதவி தேடுவாராயின் அவரது துன்பம் போக்கப் படும். இவ்வாறே ஏதாவதொரு சோதனையின் போது என்னை பெயர் சொல்லி அழைத்தால் அவரது சோதனை அகற்றப்படும். இன்னும் ஏதாவதொரு நாட்டத்தின் போது என்னை இறைவனுடைய சன்னிதானத்தில் வஸீலாவாக்குவாராயின் அவரது நாட்டம் நிறைவேறும்.

இன்னும் ஒருவர் இரண்டு ரக்அத் தொழ வேண்டும். ஒவ்வொரு ரக்அத்திலும் அல்ஹம்துக்குப் பின் பதினொரு முறை குல்ஹுவல்லாஹ் சூராவை ஓத வேண்டும். ஸலாம் கொடுத்தபின் நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம வர்களின் மீது ஸலவாத்துச் சொல்ல வேண்டும். அதன்பின் ஈராக் இருக்கும் திசையை நோக்கி பதினொரு எட்டு எடுத்து வைத்து எனது பெயரை சொல்லி தனது நாட்டத்தை கேட்பா ராயின் அல்லாஹ்வின் கட்டளையை கொண்டு அவரது நாட்டம் நிறைவேற்றி வைக்கப்படும்" நூல்: பஹ்ஜத்துல்

அஸ்ருர், பக்கம்-102. அதன்பின் கீழ்கண்ட கஸீதாவை ஓத வேண்டும்.

யோசித்துப் பாருங்கள். இந்த ஸலாத்துல் கௌஸிய்யா என்னும் தொழுகையில் ஷிர்க்கின் தாக்கம் ஏதாவது தென்படு கிறதா என்ன? ஏனெனில் இதற்கு முன்னல் நபியவர்கள் ஒரு அந்தகருக்கு சொன்னுர்கள். இரண்டு ரக்அத் தொழுது என்னு டைய வஸீலாவை கொண்டு அல்லாஹ்விடம் துஆ செய் என்பதாக. அவரும் அவ்வாறே செய்ய அவரது அந்தகத் தன்மை அகன்றது. இவ்வாறே ஹழ்ரத் உஸ்மான் பின் ஹுனைப் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் யோசனைக் கொப்ப ஒருவர் உஸ்மான் ரழியல்லாஹு அன்ஹு அவர் களின் ஆட்சிக் காலத்தில் அமல் செய்ய அவரது நாட்டம் நிறைவேறியது. அதே வழிமுறை தான் இங்கேயும் காட்டப் படுகிறது. அதாவது இரண்டு ரக்அத் தொழுது ஸையிதினு கௌஸுல் அஃழம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களின் வஸீலாவை முன்னிருத்தினல் அல்லாஹ்வுடைய நல்லருளை கொண்டு அவருடைய நாட்டம் நிறை வேறுகிறது. அத்துடன் ஸலாத்துல் கௌஸிய்யாவுடைய தொழுகையை ஸையிதினு கௌஸுல் அஃழம் ரழியல்லாஹு அன்ஹு அவர்களே கூறுவதை இங்கே நாம் கவனத்தில் கொள்ள வேண்டியது முக்கியமான விஷயமாகும்.

எனவே அல்லாஹ்வால் அங்கீகரிக்கப்பட்ட அவனது நேசர்களாகிய நல்லடியார்களை வஸீலாவாக்குவதும் அவர்க ளிடம் உதவி ஒத்தாசை போன்றவற்றை தேடுவதுமாகிய இக்கொள்கையானது, நாயகம் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லமவர்களின் காலம் தொடுத்து இன்று வரையுள்ள ஜும்ஹுர்களாலும் இமாம்களாலும் நடைமுறைபடுத்தப் பட்டு வருகிற ஒன்ருகும். இதே கொள்கை தான் இமாம் அஹ்மத் ரஜா பாழில் பரேலவியுடையதுமாகும்.

ஆனல் இதை எதிர்ப்பவர்கள் இக்கொள்கை பரேலவி களின் கொள்கையென முடக்கப் பார்க்கின்றனர். இன்னும்

இதை தழுவியே இவர்கள் தமது எல்லா பத்வாக்களையும் வெளியிட்டும் வருகின்றனர். இது இவர்களின் அறியாமைக்கு ஒரு சான்றாகும் என்பதை நாம் விளங்கிக்கொள்ள வேண்டும். உண்மையை உண்மையென கண்டுணரும் தௌபீக்கை அல்லாஹ் நம்மனைவருக்கும் அருள்வானாக. ஆமீன். பிஜாஹி ஸையிதில் முர்ஸலீன். ஸல்லல்லாஹு தஆலா அலைஹி வஸல்லம்.

## எமது வெளியீடுகள் :

1. வஸீலா என்றால் என்ன?
2. வஹ்ஹாபிய தோற்றம் (பாகம் 1)
3. வஹ்ஹாபிய தோற்றம் (பாகம் 3)
4. தப்ஸீர் சூறா பாத்திஹா*
5. உம்மத்தின் வீழ்ச்சிக்குரிய காரணம்*
6. பித்அத்தே பாத்திஹாவும்,
   அதற்குரிய சட்டங்களும்*
7. அன்னையும், பிதாவும்
8. இன்[illegible] உறக்கம்*

* Available

ரப்பானியா பப்ளிஷர்ஸ்
12/25, காந்தி தெரு,
ஜீவா நகர், திருச்சி - 620 008.